சிரவைக் கௌமார சபை வெளியீடு எண் 126

உ

குருவே துணை

# சிரவை யமக அந்தாதி

(மூலமும் உரையும்)

ஆசிரியர்
சிரவணபுரம் - கௌமார மடாலயம்
இரண்டாவது மகாசந்நிதானம்
தவத்திரு **கந்தசாமி சுவாமிகள்**

வெளியிடுபவர்
திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

முதல் பிரதி பெறுபவர்
திருமிகு K. V. குப்புசாமி அவர்கள்
நிர்வாக இயக்குநர்
எம்பி டெக்ஸ்டைல்ஸ் பிரைவேட் லிமிடெட் - திண்டுக்கல்

பதிப்பு உதவி
தீபம்

நாள்
26-11-85 கார்த்திகைக் கிருத்திகை

குருவே துணை

# சிரவை யமக அந்தாதி

(மூலமும் உரையும்)

சிரவை கௌமார மடாலயம்
இரண்டாவது மகாசந்நிதானம்
தவத்திரு கந்தசாமி சுவாமிகள் அருளியது

பதிப்பு உதவி
தீபம்

26-11-1985

குருவே துணை

# முகவுரை

சந்தமுனி யாகவந்த தண்டபா ணித்தாத்தன்
சொந்த அருட்சீர் தோய்ராமா—னந்தகுரு
கந்தகந்த சாமிகுரு சாற்று யமகம் எனும்
இந்தஅந்தா திக்கே துணை

சிரவையமக அந்தாதி என்னும் இந்நூல் சிரவணபுரம் கௌமார மடாலயத்தில் ஆறுசமயக் கடவுளர்களின் திருக்கோவில் களின் நடுநாயகமாகத் திருவருட்பொலிவுடன் விளங்கும் அருள்மிகு தண்டபாணிக் கடவுள் மீது அந்தாதியாகவும், யமகமாகவும் அமைந்த நூறு பாடல்களைக் கொண்டது.

யமகம் என்பது செய்யுளின் முதல் நான்கு எழுத்துக்கள் ஒன்றுக நான்கு வரியிலும் அமைத்துப் பாடுவது. சிரவையமக அந்தாதி எட்டு எழுத்துக்கள் நான்கு அடிகளிலும் ஒன்றுக அமையப் பெற்றது. காப்பு நூற்பயன் உள்பட நூற்றி இரண்டு பாடல்களும் ஒரே மோனையில் அமையப் பெற்றது. அருணகிரிநாதசுவாமிகள் இயற்றிய கந்தர் அந்தாதியையொட்டி அமையப்பெற்றது.

சாதாரணச் செய்யுட்கள் இயற்றவே பல நாள் பெருமுயற்சி செய்யும் இளம்புலவர்கள் யமகம் திரிபு போன்ற அற்புதப் பாடல்களை இயற்றுவோர்க்கும் படிப்போருக்கும் காலத்தை வீணுக்கும் என்று மயங்கிக்கூறுவர் சொற்சுவையும், பொருட் சுவையும் நிறையப் பெற்ற இந்தச் சிரவை யமக அந்தாதி சிறந்த புலவர்கட்கும் அறிஞர்கட்கும் படிக்கும்தோறும் சுவை பயக்கும்.

இந்நூலாசிரியர் சிரவணபுரம் கௌமாரமடாலயத்தின் இரண்டாவது குருமகா சந்நிதானமாகிய தவத்திரு கந்தசாமி சுவாமிகள். கௌமாரமடாலயத்தை நிறுவியருளிய திருவருள் திரு. இராமானந்தசுவாமிகளின் மாணவர். சிரவை அருள்மிகு தண்டபாணிக் கடவுளைப் பலகால் பூசித்து அப்பெருமான் திரு அருளாலும், குருவருளாலும் தவமும் புலமையும் அமையப் பெற்றவர்.

வாயை மீறியும் தமிழ்ப்புதுக் கவிபல வருமே''

என்ற முறையிலும்

''திடமிஞ்சியசெங் கதிர்வேல் முருகோன்
இடம்வன் றெளிர்என் மனமாம் வெளியில்
கடலின் திரையில் கவி வந்து''

என்ற வண்ணச்சரபம் மகான் தண்டபாணி சுவாமிகள் திருவாக்கின்படி பெரும் புலமை அமையப் பெற்றவர் தவத்திரு கந்தசாமி சுவாமிகள்.

பக்தமான்மியம் என்ற வைணவக்காப்பியம், மூன்று தலபுராணங்கள் ஆறுபிள்ளைத் தமிழ்கள், ஐந்து யமக அந்தாதிகள் மற்றும் எல்லா வகையான பிரபந்தங்களும் இயற்றி உள்ளார்கள் பதினெண்ணாயிரம் பாடல்களுக்கு மேல் இயற்றியருளிய சுவாமிகள் சிரவை யமக அந்தாதிக்கு மட்டுமே உரை எழுதி உள்ளார்கள்.

இந்த நூல் ஒருபகுதி மட்டும் 1959ல் வெளி வந்தது. இன்று முழுநூலும் உரையுடன் வெளிவருகிறது.

இதனை அச்சிட்டு கார்த்திகை கிருத்திகை விழாவில் **திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளால்** வெளியிடும் புண்ணியம் பெற்றவர்கள் கோவை வரதராசபுரம் **“தீபம்”** அச்சகத்தார். கௌமார மடாலயத்தில் பல கட்டளைகள் செய்து வரும் தீபம் உரிமையாளர்கள் முன்னும் சில நூல்கள் இலவசமாக அச்சிட்டு வெளியிட்டனர்.

கற்கும் அன்பர்கட்கும் கவிஞர்க்கும் விருந்தாகிய சிரவை யமக அந்தாதி வெளியிடும் தீபம் உரிமையாளர்கட்கு எல்லாம் வல்ல குமரகுருபரக்கடவுள் திருவருள் எல்லா நலமும் தந்தருள வேண்டுகின்றோம்.

கௌமார மடாலயம்
கோயம்புத்தூர்-6

**சுந்தரசுவாமிகள்**
தலைவர்

குருபாதமே கதி

குருவே துணை.



## காப்பு — கட்டளைக் கலித்துறை

சிரவையந் தாதி யலின்கா வினம்வளச் சேண்பொலிவச்
சிரவையந் தாதி கழுங்காவை யெட்டுஞ் சிறப்பிசைந்த
சிரவையந் தாதி தனக்காந் துணையிசைச் சீர்கொண்மறைச்
சிரவையந் தாதியென் சித்திம கோர்க்கடன் சேவடியே.

### இவற்றுள்

சிர-உச்சியின்கண்
வை—வைத்துள்ள
அம்—அழகிய
தாது-மகரந்தம்
இயல்—பொருந்திய
இன்-இனிய
காவினம்—சோலைக்கூட்டம்
வள—அணிபொருந்திய
சேண்—அமராவதியில்
பொலி—மிகுதிபெற்றுள்ள
வச்சிர—குலிசாயுதமேந்திய
ஐ—தேவேந்திரன்
அந்தா—பொருந்தி
திகழும்-விளங்கும்
காவை-கற்பகச்சோலையை
எட்டும்—தொட்டமையும்
சிறப்பு—மேன்மை
இசைந்த—அமைந்துள்ள

சிரவை—சிரவணபுரத்துள்ள தண்டபாணியினது
அந்தாதி-தோத்திரயமகவந்தாதி
தனக்காந்துணை—பிரபந்தத்துக் குத்துணை
இசைச்சீர்கொண்—பண்சிறப்புப் பெற்ற
மறைச்சிர-வேதமுதலில்
வை-தாங்கியுள்ள
அந்த-அழகமைந்த
ஆதியென்-பிரணவப்பொருளென்னும்
சித்திமகோர்க்கடன்-சித்திமகோர்க்கடனென்னும் பெயருள்ள விநாயக மூர்த்தியின்
சேவடியே-சிவந்ததிருவடியே.

## நூல்

*சிரவண மாபுர நீற்றர னண்பு திகழ்தருவைச்*
*சிரவண மாபுர நாடியொஞ் சின்பருட் சீலமல்குஞ்*
*சிரவண மாபுர மார்குரு நாதன்மெய்ச் சீர்த்திகளே*
*சிரவண மாபுர முள்ளவர்க் கேய்பயன் சித்திக்குமே.*

(இ-ள்)

சிர-மேன்மைமிகுந்த
வண-அழகமைந்த
மா-பெரிய
புரம்-திரிபுரத்தை
நீற்று-நீருகப்புரிந்த
அரன்-சிவபெருமானது
நண்பு-தோழமை
திகழ்தரு-விளங்காநின்ற
வைச்சிரவண-குபேரனது
மா-இலக்குமீகரம்பொருந்திய
புரம்-அளகாபுரியானது
நாடி-பார்த்து
ஒஞ்சு-நாணமுறத்தக்க
இன்பு-பேரின்பமயமான
அருட்சீல-திருவருட்சிறப்பு
மல்கும்-மலிவுபெற்றுள்ள
சிரவணமாபுரம்-சிரவணபுரமென்னும் அழகமைந்த நகரில்
ஆர்-பொருந்திய
குருநாதன்-தண்டபாணிக் கடவுளது
மெய்-உண்மையாகிய
சீர்த்திகளே-திருப்புகழ்களே
சிரவணமா-கேட்டலாக
உள்ளவர்க்கு-உடையவர்கட்கு
புரம்-மானிடசரீரம்
ஏய்-பொருந்திய
பயன்-பிரயோசனமானது
சித்தியே-சித்திப்பதாகும். 1

*சித்திக் குமர சிவகுரு வேயெனச் செப்பியுணச்*
*சித்திக் குமர வுலகுந் தொழுஞ்சிர வையனைமெச்*
*சித்திக் குமர விந்தப் பதமென்று துதிப்பவர்க்குச்*
*சித்திக் குமர ணமுதிப் பறுமெய்ச் சிவகதியே.*

சித்தி-ஞானமயமான
குமர-தண்டபாணிக்கடவுளே
சிவ-சிவபெருமானது
குருவேயென-தேசிகனே என்று
செப்பி-சொல்லி
உள்-உள்ளத்தின்கண்ணே
நச்சி-தியானித்து
திக்கும்-அட்டதிசைகளும்
அரவுலகும்-பாதலவுலகமும்
தொழும்-வணங்குகிற
சிரவையனை-சிரவணபுரத்துள்ளானை
மெச்சி-புகழ்ந்து
திக்கு-ஆதாரமாயுள்ளது
உம்-உம்முடைய
அரவிந்த-தாமரைமலர்போன்ற
பாதமென்று-பதங்களென் பதாக
துதிப்பவர்க்கு-தோத்திரிப் பார்கட்கு
சித்திக்கும்-சாத்தியமாகும்
மரணமுதிப்பறு-பிறப்பிறப்பற்ற
மெய்-சத்தியமயமான
சிவகதி-முத்திப்பேறு. 2

**சிவன்றிருக் காதி லயன்கேள் வியதிற் செகதலவாட்**
**சிவன்றிருக் காதி சுதனம்புண் டண்டன்முன் சீர்ச்சுகவா**
**சிவன்றிருக் காதி க்கியம்பல் போன்மாத் திரைபொருந்தென்**
**சிவன்றிருக் காதி கொளநேர் சிரவையெந் தேசிகனே.**

சிவன்-சிவபெருமானது
திரு-அழகிய
காதில்—செவியிலும்
அயன்கேள்வியதில்—பிரமதேவன்காதிலும்
செகதல-பூமியை
ஆட்சி-அரசாட்சிசெய்த
வன்—வன்மைமிக்க
திரு-செல்வமிக்க
காதி-காதியரசனுடைய
சுதன்-புதல்வனான விசுவாமித்திரனது
அம்பு-பாணக்கூட்டங்களை
உண்-விழுங்கியருளிய
தண்டன்-யோகதண்டமுள்ள வசிட்ட முனிவரது
முன்-தமயனாகிய அகஸ்தியர்
சீர்-சிறப்புற்ற
சுகவாசி-கிளியுடம்பிலமர்ந்த அருணகிரிநாதர்
வன்-வன்மைபடைத்த
திருக்கு-வஞ்சகமிக்க
ஆது-குற்றங்களெல்லாம்
இக-நீங்கும்படி
இயம்பல்போல்-சொல்லியருளியதுபோல்
மாத்திரை-ஒரு மாத்திரையளவு
பொருந்து-மிகுதியாயிசைந்த
என்-அடியேனது
சிவன்-சீவனது
திருக்காதி-கண்களாதிய புலன்கள்
கொள-கொண்டமையும்படி
நேர்-தெரிசனந்தந்தருள்
சிரவை-சிரவணபுரத்துள்ள
எம்-எமது
தேசிகனே-ஞானதேசிக மூர்த்தியாகிய தண்டபாணிக்கடவுளே. 3

**தேதிக் கனியன் றெழின்மேவச் செய்நற் சிரவையுளாய்**
**தேசிக் கனியன் னநகிலர் சூழ்தென்றற் றேருநகைக்குந்**
**தேசிக் கலியன் மலரிலெய்த் துன்பதஞ் சேர்தருமுத்**
**தேசிக் கலியன் றுயர்செய்யும் மாற்றந் திறத்தன்றே.**

தேசி-குதிரைமுகம்பெற்ற
கனி-பாண்டியன்மகள்
அன்று-அக்காலத்தில்
எழில்-அழகிய மனித முகத்தை
மேவச்செய்-அடையப்புரிந்து
சிரவை-சிரவணபுரத்தில்
உளாய்-எழுந்தருளியுள்ளானே
தேசிக்கனி-எலுமிச்சம்பழம்
அன்ன-போன்றநிறம்பெற்ற
நகிலர்-தனங்களையுடைய மாதர்கள்
சூழ்-வளைந்துள்ள
தென்றல்-தென்றலாகிய
தேருநகைக்கும்-இரதஞ் செலுத்தும்
தேசு-கீர்த்திமிக்க
இக்கன்-மன்மதன்பால்
இயல்-பொருந்தியுள்ள
மலரில்-பூவம்புகளால்
எய்த்து-வருந்தி
உன்பதம்-உனதுதிருவடிகளை
சேர்தரும்-அடையக்கருதும்
உத்தேசிக்கு-எண்ணமுள்ள எனக்கு
அனியன்-அன்னியமானவர்
துயர்-துன்பம்
செய்யும்-புரியும்
மாற்றம்-மாறுபாடு
திறத்தது-தகுதியுடையது
அன்று-அல்லவாகும்
ஏ-அசை. 4

திறமையன் றந்த மகடுயர் கூரத் திணைப்புனத்தந்
திறமையன் றந்த விபமா வரச்செய் சிரவையுளாய்
திறமையன் றந்த ரெனையடர்க் குஞ்செயல் தேர்ந்தமைகை
திறமையன் றந்த ணைநீட் டருட்டுறை யெனைச் சேர்த்தருளே.

| | |
|---|---|
| திற-உறுதியன்பினாளான | அந்தர்-கீழான ஐம்புலவேடர் |
| மையன்-மேகவாகனனை | எனை-அடியேனை |
| இந்திரன் | அடர்க்குஞ்செயல்-நெருக்குஞ்செய்கைகளை |
| தந்த-கொடுத்தருளிய | தேர்ந்து-கண்டும் |
| மகள்-தெய்வயானையம்மை | அமைகை-அடங்கியிருப்பது |
| துயர்கூர-துன்பமிகுதிபெற | திற-பாக்கியமாயுள்ள |
| திணைப்புனத்து-திணைவனமாகிய | மையன்-மத்திநிலையை |
| அந்தில்-அவ்விடத்தில் | தம்-கொடுத்தருளி |
| தமையன்-விநாயகக் கடவுளை | தண்-குளிர்ச்சிமிகுந்த |
| தந்த-தந்தங்களையுடைய | அருட்டுறை-திருவருட்கதியில் |
| இபமா-யானைவடிவத்துடன் | |
| வரச்செய்-வருமாறுவேண்டிய | |
| சிரவை-சிரவணபுரத்தில் | எனை-அடியேனை |
| உளாய்-எழுந்தருளியுள்ள தண்டபாணிக்கடவுளே | சேர்த்தருள்-கூட்டியருள்வாயாக |
| திறமையன்று-உனக்குச் சாமர்த்திய செயலல்ல | ஏ-அசை |

௫ 5

௬ சேரவி ராவன் புதன்குரு சன்புகர் தீப்பணிகள்
சேரவி ராவன் புஞற்றநொந் தேனுளந் தேர்தரக்கை
சேரவி ராவன் புதவிச் சிரவையெந் தேவநின்றாள்
சேரவி ராவன் புலக்கூ டழிதருஞ் சேதமற்றே

| | |
|---|---|
| சே-செவ்வாய் | தேர்தர-தெளிவடைய |
| ரவி-சூரியன் | கைசேர-என்பாலிசையும்படி |
| ராவன்-இரவுக்குரிய சந்திரன் | விராவு-கலந்த |
| புதன்-புதன் | அன்பு-பத்திப்பெருக்கத்தை |
| குரு-வியாழன் | சிரவை-சிரவணபுரத்துள்ள |
| சன்-சனி | எம்-எமது |
| புகர்-சுக்கிரன் | தேவ-தண்டபாணிக்கடவுளே |
| தீப்பணிகள்-கொடியராகுகேதுகள் | நின்தாள்-உனது திருவடியில் |
| | சேர்-சேர்த்தருள் |
| சேர-ஒன்றாய் | அவிரா-பிரகாசமயமாகாத |
| இரா-இல்லாத | வன்-வலிய |
| வன்பு-கொடுமைகளை | புல்க்கூடு-சரீரம் |
| உஞற்ற-செய்ய | அழிதரும்-அழியும் |
| நொந்தேன்-மெலிந்தேனை எனது | சேதம்-நட்டத்தன்மை |
| | அற்று-இல்லாமற்செய்து |
| உளம்-இருதயம் | ஏ-அசை. |

௬ 6

சேதத் தையல ரிடைக்காமர்த் தென்றலின் தேரினனி
சேதத் தையல ரினம்பாயந் துருவலிற் சிந்தையிலாஞ்
சேதத் தையல ரினைத்தாங் குகிலன் சிரவையர
சேதத் தையல ரினற்சீர்த்தி யோங்கிடச் செய்தருளே.

சேது-சிவந்தநிறமுள்ள
அ-அந்த
தையல்—பெண்களது
இடை-மத்தியில்
காமர்-அழகுமிக்க
தென்றல்-தென்றற்காற்றுன
இன்-இனிய
தேரினன்-தேரையுடைய மன்மதன்
நிசேதத்து-தள்ளக்கூடிய
ஐயலர்-பஞ்சப்பூவம்புகள்
பாய்ந்து-நுழைந்து
உருவலில்-ஊடுருவலால்
சிந்தையில்-இதயத்தில்
ஆம்-உண்டாகும்
சேதத்தை—நட்டத்தையும்
அலரினை-பழிச்சொல்லையும்
தாங்குகிலன்-சகிக்கமாட்டேன்
சிரவை-சிரவணபுரத்துக்கு
அரசே—தலைவனை தண்டபாணிக்கடவுளே
தத்தை-அருணகிரிநாத சுவாமிகள் அடைந்த
அலர்-விரிந்த
இன்-இனிமையமைந்த
நற்சீர்த்தி-நன்மையானபுகழை
ஓங்கிட-என்பால் வளர்ந் தோங்க
செய்தருள்-புரிந்தருள்வாயாக
ஏ-அசை.

7

செய்யா ளமைந்த மனைவாழ்க்கை சுற்றஞ் செழிப்பிசைநீர்ச்
செய்யா ளமைந்த நகராட்சி யிச்சையுட் டீர்த்தெனையே
செய்யா ளமைந்த விதவத்தர் தோய்நிலை சேர்சிரவைச்
செய்யா ளமைந்த விரிலைவை வேற்படைச் சேவகனே.

செய்யாள்-இலக்குமி
அமைந்த-தங்கிய
மனை-வீடும்
வாழ்க்கை-வாழ்வும்
சுற்றம்-பந்துக்களும்
செழிப்பிசை-வளப்பமுற்ற
நீர்-தண்ணீரானிறைந்த
செய்-வயலும்
ஆள் இவற்றையாளத்தக்க
அம்-அழகிய
மைந்தன்-புத்திரனும்
நகராட்சி-இராஜசம்பத்தும்
இச்சை-ஆசையை
உள்-இதயத்தில்
தீர்த்து-ஒழித்து
எனையே-அடியேனை
செய்-செய்தருள்
ஆள்-அடிமையாகிய
அம்-நலம்பொருந்திய
ஐந்து-ஐம்புலன்கள்
அவி-இறக்கப்பெற்ற
தவத்தர்தோய்-தவசிகள் கலந்த
நிலை-நடுநிலையில்
சேர்த்தருள்-கூட்டியருள்வாயாக
செய்-சிவப்புத்தன்மையை
ஆள்-கையாளும்
அ-அந்த
மைந்தவிர்-பலம்பிரகாசிக்க
இலை-இலைவடிவமைந்த
வைவேற்படை-கூரியவேலாயுதமேந்திய
சேவகனே-வீரத்தன்மையனே

8

சேவா கனத்தன் விகங்கங் கிரியெனத் தேடவெட்டாச்
சேவா கனத்தன் சிவைபால கவா சிரவையர
சேவா கனத்தன் னனையாய் வருகெனச் செப்பல்விடேன்
சேவா கனத்தன் புடையேனென் கண்முற் றிகழ்ந்தருளே.

சே-செந்நிறம்பெற்ற
ஆகன்-சரீரமுள்ள பிரமனும்
அத்தன்-பிதாவாகிய திருமாலும்
விகங்கம்-அன்னமும்
கிரி-பன்றியும்
என-என்பதாகவடிவமுற்று
தேட-பறந்துமகழ்ந்துந்தேடியும்
எட்டா-காணமுடியாத
சேவாகனத்தன்-இடபவாகனமுள்ள பரமசிவன்
சிவை-அம்பிகையினது
பாலகவா-குமாரனே வருக
சிரவை-சிரவணபுரத்துக்கு
அரசேவா-தலைவனே வருக
கன-பெருமையில்
தன்னனையாய்-தனக்குச்சமானமானவனே
வருக-வந்தருள்வாய்
செப்பல்-தோத்திரஞ்செய்தலை
விடேன்-ஒழியமாட்டேன்
சேவா-உன்சேவை பெறும்படி
கல்-மலைகளை
நத்து-இடையீடறவேண்டும்
அன்புடையேன்-காதலுள்ளேன்
என்-அடியேனது
கண்முன்-விழிகளின்முன்பாக
திகழ்ந்தருள்-பிரகாசித்தருள்வாயாக
ஏ-அசை. 9

திகழலங் காரண சூராவென் மாயவத் தித்தசைப்பொதி
திகழலங் காரண மாமுடி யாய்மால் சிவனயன்று
திகழலங் காரண மீந்தரு ளிப்பொய்ச் செகத்தினியாந்
திகழலங் காரண மாருஞ் சிரவைப் பதிக்குருவே.

திகழல்-பிரகாசித்தலாகிய
அங்கா-திருமேனியுடையானே
ரணசூரா-போர்வீரனே
என்-அடியேனுடைய
மாய-பொய்மையாகிய
அத்திதசை-என்புதசையுடன்கூடிய
பொதி-மூட்டையானது
கழல்-நீங்கிய
அங்கு-அவ்விடத்தில்தோன்றும்
ஆரண-வேதத்தினது
மாமுடியாய்-பெரியகிரீடமானவனே
மால்-திருமாலும்
சிவன்-பரமசிவனும்
அயன்-பிரமதேவனும்
துதி-தோத்திரித்துவணங்கும்
கழல்-திருவடியாகிய
அம்-அழகிய
காரணம்-முதன்மையை
ஈந்தருள்-கொடுத்தருள்வாயாக
இ-இந்த
பொய்ச்செகத்து-அநித்தியவுலகில்
இனி-இனிமேலும்
யாம்-அடியேம்
திகழலம்-தோற்றமட்டோம்
கா-சோலையினது
ரணம்-உரிமை
ஆரும்-பொருந்தும்
சிரவைப்பதி-சிரவணபுரத்தில்விளங்கும்
குருவே-தண்டபாணிக் கடவுளே. 10

**திக்கற்ற பாவிய னீ நிதநின் றிருப்புகழ்த்து**
**திக்கற்ற பாவிய பேரரு ளாயிது செய்கையினே**
**திக்கற்ற பாவிய லோவா துரைப்பன் சிரவையின்மேய்த்**
**திக்கற்ற பாவிய லெந்தா யெனக்கீந் திடன்முறையே.**

திக்கற்ற-தாபரமில்லாத
பாவியன்—பாவத்தன்மை யுடையவன்
நான்-அடியேன்
நீ-தேவரீர்
நிதம்-நாடோறும்
நின்-உன்னுடைய
திருப்புகழ்—திருப்புகழினது
துதிக்கு-தோத்திரத்துக்கு
அற்ற-வசமிழந்த
பாவிய விரிவான
பேரருளாய்-திருவருட்பெருக்க முற்றவன்
இது-இந்நதைய
செய்கையின்- காரியத்தால்
ஓதி-வாசித்து
கற்ற-படித்துள்ள
பாவியல்-துதித்தமிழ்களை
ஓவாது—நீங்காமல்
உரைப்பன்-பாராயணஞ் செய்வேன்
சிரவையின்—சிரவணபுரத்தின்
மேய்—மேவி
திக்கு—தடைபடுத்தும்
அல்—அஞ்ஞானவிருளை
தபு—நீக்கக்கூடிய
ஆ-சிவஞானமான
இயல்-இயற்கையின்பத்தை
எந்தாய்-என்னுடைய தந்தையே
எனக்கு—அடியேனுக்கு
ஈந்திடல்-கொடுத்தருளுதல்
முறை-தகுதியானதாகும்
ஏ-அசை.

11

**திடபத்தி யார்வத் திரத்தர்தம் வேடமெய் சேர்த்துலகேய்ந்**
**திடபத்தி யார்வத்தி ரந்தல்செய் வேற்குச் சிரவைமும்ம**
**திடபத்தி யார்வத்தி ரத்தல ரார்ப்பர்க்குச் செப்பிடுசோ**
**திடபத்தி யார்வத் திரத்தத்த நின்னருட் சீரெளிதே.**

திட-உறுதியமைந்த
பத்தியார்வ-அன்புக்களிப்புறற்கு
திரத்தர்தம்-நிலைபெற்றுள்ளவரது
வேடம்-சின்னங்களை
மெய்சேர்த்து-சரீரத்திற்புனைந்து
உலகு-உலகத்தில்
ஏய்ந்திடு—பொருந்திய
அபத்து—வீண்செய்கையுள்ள
இயார்—உலோபிகளுடைய
வத்து—பொருள்களை
இரத்தல்-யாசித்தல்
செய்வேற்கு-புரிவேனுக்கு
சிரவை—சிரவணபுரத்து
மும்மதிள்—முப்புரங்களையும்
தப-கெடும்படி
தீயார்வத்திரத்து—அக்குனி மயமான முகத்தினிடத்து
அலர்—விரிந்த
ஆர்ப்பர்க்கு-நகையுடைய சிவபெருமானுக்கு
செப்பிடு-போதித்த
சோதிட—நன்னிமித்தமான
பத்தி—வரிசையமைந்த
ஆர்வத்திரத்து—ஆசைப் பெருக்கமுற்ற
அத்த-சொற்பொருளையுடைய
நின்-உன்னுடைய
அருட்சீர்—திருவருட்சிறப்பு
எளிதே-பெறுதற்கெளிதாமோ

12

*சீரணித் தாக ரமகன்று ழல்வச் சிரக்கைமன்னன்*
*சீரணித் தாக வடிவே லெறியுஞ் சிரவையவா*
*சீரணித் தாகமி குக்கச்சொற் றென்றீ வினைமெயினுட்*
*சீரணித் தாக முருக்கென் மிசைநின் றிருக்கண்வைத்தே.*

சீரணித்து—அழிந்து
ஆகரம்-இருப்பிடமாகிய
துறக்கத்தை
அகன்று—நீங்கி
உழல்—சுழன்ற
வச்சிர-குலிசாயுதந்தரித்த
கை-கரத்தையுடைய
மன்னன்—இந்திரன்
சீர்—செல்வமானது
அணித்து—சமீபத்தில்
ஆக—தோன்றச்செய்ய
வடிவேல்-கூரிய வேலாயுதத்தை
எறியும்—செலுத்திய
சிரவைய-சிரவணபுரத்தலைவனே
ஆசீர்-வாழ்த்து
அணி—பொருந்தி
தாகம்—திருவருள்தாகமானது
மிகுக்க—அதிகப்பட
சொற்று—திருவாய்மலர்ந்து
என்-அடியேனுடைய
தீவினை—கொடியகன்மமுற்ற
மெய்யினுள்—சரீரத்துள்
சீர்—சிறப்பு
அணித்து—கலந்து
ஆகம்—சரீரத்தை
உருக்கு-உருகச்செய்
என்மிசை—என்மீது
நின்—உன்னுடைய
திருக்கண்—அழகிய கண்
பார்வையை
வைத்து-அமையச்செய்து
ஏ-அசை. 13

*திருக்கண் டிறந்த வகங்கார மூடிச் செகம்பழிக்கத்*
*திருக்கண் டிறந்தவர் போங்கமை யாதெஞ் சிரவையுளாய்*
*திருக்கண் டிறந்தவ விச்சைகொண் டோன்செப்பிடுமகிமைத்*
*திருக்கண் டிறந்தவ முற்றோடச் செய்யித் தினத்துவந்தே.*

திரு-செல்வப்பெருக்கத்தை
கண்டு-பார்த்து
இறந்த-மிகுதியாகிய
அகங்காரம்—ஆங்காரவிருள்
மூடி—கவிதலுற்றதனல்
செகம்பழிக்க-உலகர்நிந்திக்க
திருக்கு-குற்றமானது
அண்டு-நெருங்குந்தன்மையுடன்
இறந்தவர்-செத்தொழிந்தோர்
போங்கு-கதியில்
அமையாது—படிந்துவிடாமல்
எம்-எமது
சிரவையுளாய்-சிரவணபுரத்தில்
உடையானே
திரு-இலக்குமிதேவியின்
கண்—இடத்து
தில்—ஆசையை
தந்த-கொடுத்த
அ-அந்த
விச்சை—ஞானப்பெருக்கத்தை
கொண்டோன்-பெற்றதிருமால்
செப்பிடும்-தேவர்கட்கிசைந்த
மகிமை-மேன்மையையுடைய
உனது
திரு—அழகிய
கண்திறந்து—விழிமலர்ந்து
அவம்-தீமைகள்
முற்று-முழுவதும்
ஓட-போகும்படி
செய்—புரிந்தருள்
இத்தினத்து—இந்தநாளில்
அருள்—திருவருளை
ஏ-அசை. 14

தினகர கோடி யனவில் லுமிழுஞ் செயவயிலேந்
தினகர கோடிய லாலயத் தாடெஞ் சிரவையிற்செந்
தினகர கோடியல் பிற்றிரித் தேயெனைத் தீயவினை
தினகர கோடிய நெஞ்சடங் காது திரிவதுவே.

தினகர-சூரியர்களது
கோடியன-கோடிகூட்டஞ் செறிந்தாலனைய
வில்-பிரகாசத்தன்மையை
உமிழும்-கக்குகின்ற
செய-வெற்றிமிகுந்த
அயிலேந்தின-வேலாயுதந்தரித்த
கர-கையையுடையானே
கோடு-மலைகளினிடத்துஉள்ள
இயல்-பொருந்திய
ஆலயத்து-கோயில்களில்
ஆடு-நடனம்புரிவோய்!
எம்-எம்முடைய
சிரவையில்-சிரவணபுரத்தில்
செந்தின்-உயிர்களிடத்துள்ள
அகர-அகரம் போன்றவனே
கோடு-வளைதலுள்ள
இயல்பில்-சுபாவத்தில்
திரித்து-திரிபுபடுத்தி
எனை-அடியேனை
தீயவினை-கொடியகன்மமானது
தின்-உண்கிறது
அ-அந்த
கர-விடம்பொன்ற
கோள்-கிரகவசமுற்ற
திய-கெட்ட
நெஞ்சு-மனமானது
அடங்காது-அமைதிபெருது
திரிவது-அலைகின்றது
ஏ-அசை 15

திரிவிதத் தாசையி லிடைபட் டுழல்வேன் சிரவையாயென்
திரிவிதத் தாசை யறச்சாடி யென்னுளஞ் சேர்ப்பதுவி
திரிவிதத் தாசைகளில்வா னளக்குஞ் சிகரிதொறுந்
திரிவிதந் தாசை யருந்தமிழ் நான்கினுஞ் செப்புமதே.

திரி-மண் பொன் பெண்ணென
விதத்து-வகைபட்ட
ஆசையிடை-இச்சையினுள்
பட்டு-சிக்குண்டு
உழல்வேன்-தடுமாற்றம் அடைவேன்
சிரவையாய்-சிரவணபுரத் தலைவனே!
என்-அடியேனுடைய
திரிவி-மாறுபடுத்து
தத்து-ஆபத்துடன்கூடிய
ஆசை-குற்றங்களை
அற-நீங்கும்படி
சாடி-சங்கரித்து
என்-அடியேனுடைய
உளம்-இருதயத்தில்
சேர்ப்பது-கூட்டிவைப்பது
விதிரி-நடுக்கமுறச்செய்யும் பனிக்கிரணமுள்ள
விது-சந்திரன்
அத்து-தவழும்படியாக
ஆசைகளில்-திசைகளில்
வானளக்கும்-ஆகாயத்தை யெட்டும்
சிகரிதொறும்-குன்றுதோறும்
திரிவி-திரியச்செய்து
தத்து-பாய்ந்து
ஆசு-ஆசுமுதலாகிய
ஐ-அழகிய
அரும்-அருமையமைந்த
தமிழ் நான்கினும்-நாற்கவியினும்
செப்புமதே-சொல்லுமது வேயாம் 16

செப்பிடு வித்தையந் தோதக மூடிச் சிறந்தகொங்கைச்
செப்பிடு வித்தை யகத்தே வளர்க்குந் தெரிவையர்சேர்
செப்பிடு வித்தையம் நீக்கிடெஞ் செல்வச் சிரவையமெய்
செப்பிடு வித்தை பெறுமா தவருட் டிரம்பெறவே.

செப்பிடுவித்தை-செப்படி
வித்தைபோன்ற
அம்-அழகிய
தோதகம்-வஞ்சகத்தன்மையை
மூடி-மறையவைத்து
சிறந்த-சிறப்புப்பெற்ற
கொங்கை-தனங்களாகிய
செப்பு-சிமிழ்களில்
இடு-பெய்துள்ள
வித்தை-விதையை
அகத்தே-இதயத்தின்கண்ணே
வளர்க்கும்-விருத்திசெய்யும்
தெரிவையர்-மங்கையர்கள்
சேர்-கூட்டுகின்ற
செ-பிறவியை
பிடுவித்து-வேறுபடுத்தி
ஐயம்-சந்தேகஞானம்
நீக்கிடு-நீங்கியொழித்தருள்
எம்-எமது
செல்வ-திருமகள்வாழும்
சிரவைய-சிரவணபுரத்துள்ள
தண்டபாணிக்கடவுளே
மெய்-உண்மையை
செப்பிடு-உபதேசித்தருள்வாயாக
வித்தை-மெஞ்ஞானுநுபவம்
பெறும்-அடைந்துள்ள
மா-பெரிய
தவருள்-தவசிரேட்டருள்
திரம்பெற-உறுதியுடன்
வாழும்படி
ஏ-அசை- 17

திரமாய வாக்கை யருளிநின் சீர்த்திகள் செப்பவைத்து
திரமாய வாக்கை யபிமான மாற்றிசை சேர்மறைமெய்த்
திரமாய வாக்கை யமைப்பானைக் குட்டுஞ் சிவையருட்புத்
திரமாய வாக்கை யவர்தோய் சிரவையெஞ் சிற்பரனே.

திரமாய-உறுதியாகிய
வாக்கை-அருள்வாக்கை
அருளி-கொடுத்து
நின்சீர்த்திகள்-உனது
மகிமைகளை
செப்பவைத்து-துதிக்கும்படி
யமைத்து
உதிரமாய-இரத்தமயாமயமான
ஆக்கையபிமானம்-தேகாபி
மானத்தை
மாற்று-தீர்த்தருள்
இசைசேர்-பண்ணமைந்த
மறை-வேதத்தினது
மெய்த்திரம்-உண்மைநிலையை
ஆய்-ஆராய்ந்து
அ-அந்த
ஆக்கை-சிருட்டித்தொழில்
அமைப்பானை-செய்யும்பிரமனை
குட்டும்-மோதிய
சிவை-உமாதேவியின்
அருட்புத்திர-திருவருட்குமரனே
மாய்-கொல்லுகின்ற
அவா-ஆசையை
கை-வெறுக்கும்
அவர்தோய்-அத்தகையோர்
பொருந்தியுள்ள
சிரவை-சிரவணபுரத்தமர்ந்த
எம்-எமது
சிற்பரனே-ஞான
தண்டபாணிக்கடவுளே. 18

**சிற்பர தத்து வடிவூ டமைந்தும தீதமெய்துஞ்**
**சிற்பர தத்து வனேசிர வைப்பதித் தேவவென்னெஞ்**
**சிற்பர தத்து வழியிசை யாதுன் ருவடிதோய்**
**சிற்பர தத்து வகைத்தலை சேரச் செலுத்துதியே.**

சிற்பரது-சிற்பசாஸ்திரிகளது
அத்து-இசைப்பாகிய
வடிவூடு-மூர்த்தங்களிடை
அமைந்தும்-பொருந்தியும்
அதீதமெய்தும்-எட்டாமலமைந்துள்ள
சிற்பர-கடவுளே
தத்துவனே-சத்தியசொரூபனே
சிரவைப்பதி-சிரவணபுரத்தமர்ந்த
தேவ-தேவனே
என்-அடியேனது
நெஞ்சில்-இருதயத்தில்
பர-அன்னியமான
தத்து-ஆபத்துடன்கூடிய
வழி-துன்மார்க்கமானது
இசையாது-பொருந்தாது
உன்-உனது
திருவடிதோய்-அழகிய பாதங்கலந்த
சின்-ஞானமயமான
பரதத்து-நடனத்தின்
உவகை-சந்தோடம்
தலைசேர-கூடும்படி
செலுத்துதி-உய்த்தருள்வாயாக
ஏ-அசை.

19

**செல்வா கனத்தமை கோனேர் கலாபச் சிகிச்சிரவைச்**
**செல்வா கனத்தமை மெய்மான் மருகதென் காலர்விதி**
**செல்வா கனத்தமை யற்கெட் டொழியத்தை தேயர்மன் முன்**
**செல்வா கனத்தமை வீறழித் தான்பெருந் தீரநல்கே.**

செல்வாகனத்து-மேகவானத்தில்
அமை-பொருந்திய
கோனேர்-தேவேந்திரன் போன்ற
கலாப-தோகை
சிகி-மயில்வாகனத்தையுடைய
சிரவை-சிரவணபுரத்தமர்ந்த
செல்வா-பிரபுவே
கல்-ஓசையுள்ள
நத்த-சங்கினைக்கொண்ட
மை-மேகம்போன்ற
மெய்மால்-திருமாலினது
மருக-மருமகனே
தென்காலர்-தெற்குத் திசையிலுள்ள இயமன்
தென்றலிரதமுள்ள மன்மதன்
விதி-பிரமதேவன்
செல்வு-செலுத்துகிறது
ஆகு-ஆன
அனத்தமையல்-மயக்கங்கள்
கெட்டொழிய-கேடமைந்தொழிந்துபோக
தைதேயர்-அசுரர்களது
மன்-தலைவனாகிய சூரபதுமனுக்கு
முன்-முன்பாக
செல்-தூதுசென்ற
வாகன்-வீரவாகு தேவர்
அத்த-கையினால்
மை-ஆட்டினது
வீறழித்தான்-பெருமையை நீக்கினான் பெற்றுள்ள
பெரும்-பெரிதான
தீரம்-தீரத்தன்மையை
நல்கு-கொடுத்தருள்வாயாக

20

தீரத் தவத்துத் தமருந் துணைவருஞ் செய்யுமுற்ற
தீரத் தவத்துத் தமருந்து மாறுசெய் தேவியுநோய்
தீரத் தவத்துத் தமருந்து மோதுணை சீர்ச்சிரவைத்
தீரத் தவத்துத் தமருந்து தாடோய் சிறுதுகளே.

தீர்-விலகக்கூடிய
அத்த-கையிலுள்ளபொன்
முதலிய
வது-பொருள்களும்
தமரும்—சுற்றத்தாரும்
துணைவரும்-சகோதரரும்
செய்யும்—வயல்நிலங்களும்
உற்ற-பொருந்திய
தீ-அக்கினியுடனும்
ரத்த—இரத்தத்துடனும்கூடிய
அ-அந்த
துத்தம்-வயிருனது
அருந்துமாறு-உண்ணும்படி
உணவாதிய
செய்-புரிந்து பாதுகாக்கும்
தேவியும்-மனையாளும்
நோய்—வியாதிகளை
தீர-முற்றிலும்
தவு-கெடுக்கும்
அத்துத்த—அடைவையுடைய
மருந்துமோ-மருந்துந்தானே
துணை-துணையாவது
சீர்ச்சிரவை-சிறப்புற்றசிரவண
புரத்தில்
தீர்த்தவ-கடினதவப்பெருக்
குற்ற
உத்தமர்-மேலோர்கள்
உந்து-செலுத்தும்
தாடோய்-திருவடியிற்கலந்த
சிறுதுகளே-சிறியபொடிகளே
யாகும். 21

சிற்றம் பலக்கண் ணுதலணி மங்கையர் சேனைமதன்
சிற்றம் பலக்கண் ணுதவாது மைமெய்த் திளைப்பிசையுஞ்
சிற்றம் பலக்கண் ணுதல்பே றருள்மெய்ச் சிரவையினெஞ்
சிற்றம் பலக்கண் ணுதல்சேர்வை வேற்கைச் செயத்தரசே.

சில்-ஆரவாரமுற்ற
தம்-தமது
பல்-பல்லும்
அக்கு-கண்ணும்
அண்-பொருந்திய
நுதல்-நெற்றியும்
அணி-அழகமையப்பெற்றவரான
மங்கையர்-மாதர்களது
சேனை-படையையுடைய
மதன்-மன்மதன்
சிற்றம்பு-சிறிய பாணங்கள்
அலக்கண்-துன்பத்தை
உதவாது—கொடுக்காமல்
உமை-உமாதேவியின்
மெய்த்திளைப்பு-திருமேனியழுந்
துதல்
இசையும்-பொருந்தும்
சிற்றம்பல-ஞானகாசத்தமைந்த
கண்ணுதல்-சிவபெருமான்
போன்ற
பேரருள்—பெருவாழ்வையடைய
மெய்-உண்மையாகிய
சிரவையில்—சிரவணபுரத்திலும்
நெஞ்சில்—எனதிதயத்திலும்
தம்ப-துணையாக
லக்கு-இலட்சியம்பெற
அண்ணுதல்—சாருந்தன்மை
சேர்-பொருந்திய
வைவேல்-கூரியவேலாயுதந்
தரித்த
கை—கரத்தையுடைய
செயத்தரசே-வெற்றிமிகுந்த
தலைவனே. 22

செயத் தக்க தான நலத்தினை நாடித் தெளிந்துலகிற்
செயத் தக்க தான தருமம் கருதார் சிரவையிசை
செயத் தக்க தான வரைகண்டு மேத்தலர் சென்மமிருட்
செயத் தக்க தான மகிங்கரர்க் கேவற் செறிப்பதுவே.

செய்—வயலுக்கும்
அத்தக்கு-பொருளுக்கும் அலைவர்
அதான-அதனாலான
நலத்தினை-நன்மைகளை
நாடி-ஆராய்ந்து
உலகில்-பூமியின்கண்
செயத்தக்க-செய்யத்தகுந்த
தான-கொடையையும்
தருமம்—அறங்களையும்
கருதார்-நினைக்கமாட்டார்
சிரவை-சிரவணபுரத்தவர்கள்
இசை-புகழ்ந்துபோற்றும்
செயத்து—வெற்றிமிகுந்த
அக்க-கண்போன்ற
தான-(உனது)தலங்களாயுள்ள
வரைகண்டு—மலைகளைப் பார்த்துங்கூட
ஏத்தலர்—தோத்தரிக்கிலர்
சென்மம்-மனிதப்பிறவியானது
இருட்செய்-நரபூமியினுள்ள
அத்தக்கதா—கதாபாணியான
நம-இயமனது
கிங்கரர்க்கு-தூதர்கட்கு
ஏவல்—வேலையை
செறிப்பது - நெருங்கப்புரிவதாகும்
ஏ-அசை

23

செறிக்கத் தகுதி பலியாத்தெம் பாலுன் றிறற் கொளங்கஞ்
செறிக்கத் தகுதி ருநுதற் றிருக்கிற் செனித்த செவ்வேள்
செறிக்கத் தகுதி பெறுகவு மாரர் சிரவையன்றாள்
செறிக்கத் தகுதி கொடியென்ன வேண்டித் துதித்தனமே.

செறு-கொல்லத்தகுந்த
இக்கந்த—கரும்பு வில்லுடைய மன்மதனே
குதி-உன்முயற்சிஇனிமேல்
பலியாது-சாத்தியப்படாது
எம்பால்—எம்மிடத்தில்
உன்—உனது
திறல்கொள-வலிமைகொண்ட
அங்கம்-சரீரமானது
செறிக்கத்தகு-அழிக்குந்தன்மை பெற்ற
திரு—அழகிய
நுதல்திருக்கில்-நெற்றிக் கண்ணில்
செனித்த-அவதரித்தருளிய
செவ்வேள்-முருகப்பெருமானை
செறிக்க-தமதுபங்காகக் கொள்ளும்
தகுதி-தவப்பெருமைகொண்ட
கவுமாரர்-கவுமார சித்தர்களது
சிரவையன்-சிரவணபுரத்துள்ள தண்டபாணியது
தாள்-திருவடிகளே
செல்-அடையத்தகுந்த
திக்கு-ஆதரவாகுமென்று
அக்க- இறைவனே
குதிகொடி-எம்முள்ளத்தே குதிகொண்டருள்
என்ன—என்பதாகும்
வேண்டி—நம்பி
துதித்தனம்-தோத்திரஞ்செய் தோம்
ஏ-அசை.

24

**தித்தித் திருக்கு நிணங்குடர் தோய்கொடி சேனநரித்**
**தித்தித் திருக்கு மலவுடற் காப்பறத் தீரவகந்**
**தித்தித் திருக்கு முபதேச மீந்தெஞ் சிரவையின்மத்**
**தித்தித் திருக்கு முடியோரந் நால்வர் தெளிவருளே.**

தித்தி—பைபோன்ற
திருக்கு-குற்றமிகுந்த
நிணம்—தசையும்
குடர்-குடலும்
தோய்—பொருந்தியுள்ளதும்
கொடி-காக்கையும்
சேனம்-கழுகும்
நரி-நரியும் உண்ணத்தகுந்த
தித்தி-தின்பண்டமான
திருக்கு-வஞ்சகத்தன்மை
யினதுமான
மல-அழுக்கமைந்த
உடற்காப்பு-மெய்க்காவல்
அறத்தீர—முழுதும் நீங்க
அகம்-இதயத்தில்
தித்தித்திருக்கும்-இனிப்புற்று
நீங்காத
உபதேசம்-உபதேசத்தை
ஈந்து-கொடுத்து
எம்-எமது
சிரவையில்-சிரவணபுரத்தில்
மத்தித்து-கடைந்து
இத்தி—கல்லாலடியில்
ருக்குமுடி-வேதத்தினுச்சிப்
பொருளை
ஓர்-உணர்ந்த
அ-அந்த சனகர் முதலான
நால்வர்-நான்கு முனிவருள்ள
மைந்த
தெளிவு—விளக்கத்தை
அருள்-கொடுத்தருள்வாயாக
ஏ-அசை

25

**தெள்ளிய மாவருந் திக்குற மாதினஞ் செங்கனிவாய்த்**
**தெள்ளிய மாவருந் தோற்றங்கண் டேங்குஞ் சிரவையற்றேய்**
**தெள்ளிய மாவருந் தோமினி யாங்கைத் திறற்கயிற்றைத்**
**தெள்ளிய மாவருந் தன்மையெண் ணேலுன்றன் சிந்தையினே**

தெள்ளிய-கொழித்துத்தந்த
மாஅருந்தி-தினைமாவையுண்டு
குறமாதின்—வள்ளியம்மையி
னுடைய
அம்-அழகிய
செங்கனிவாய்-கோவைப்பழம்
போன்ற வாயிலிருந்து
தெள்—ஒளிமிகுந்த
இயம்-சொல்லும்
மா-பெரிய
அருந்தோற்றம்—அரியவடிவமும்
கண்டு—பார்த்து
ஏங்கும்-ஏக்கமுற்ற
சிரவையன்—சிரவணபுரத்த
மர்ந்த தண்டபாணிக்கடவுளை
தோய்-பொருந்தத்தக்க
தெள்ளியம்—விளக்கமுற்றேம்
ஆ-சப்புமிகுந்தோம்
வருந்தோம்—துன்புறமாட்டோம்
இனி-இனிமேல்
யாம்-யாங்கள்
கை-கரத்திலுள்ள
திறல்-வலிமைமிக்க
கயிற்றை—பாசத்தை
தெள்-வீசுங்குணம்பெற்ற
இயமா—நமனே
வருந்தன்மை-வரும்பான்மையை
எண்ணேல்—நினையாதே
உன்—உனது
சிந்தையின்—இதயத்தில்
ஏ—அசை

26

சிந்தை யிலங்க மலையாம லன்பு சிறந்தலைதோய்
சிந்தை யிலங்க லசமுனி யொக்குந் திறம்படைத்தென்
சிந்தை யிலங்க வருள்சர ணனேன் சிரவையிற்க
சிந்தை யிலங்க ரமிசைதண் டோடுந் திகழ்குருவே

சிந்து-கெடுக்குந்தன்மையுடைய
ஐயில்-பஞ்சேந்திரியங்களால்
அங்கம்-சரீரமானது
அலையாமல்-சுழலாமல்
அன்பு—பத்திப்பெருக்கம்
சிறந்து-மிகுதிப்பட்டு
அலைதோய்—திரையமைந்த
சிந்து-சமுத்திரத்தை
அயில்—உண்டருளிய
அம்-அழகமைந்த
கலசமுனி—அகஸ்தியரை
ஒக்கும்-ஒப்பாகும்
திறம்-உறுதிநிலையை
படைத்து-அடைந்து
என்-அடியேனுடைய
சிந்தை—இருதயமானது
இலங்க—பிரகாசிக்கும்படி
அருள்—அநுக்கிரகித்தருள்வாயாக
சரணனேன்-உனக்குஅடைக்கலமானேன்
சிரவையில்-சிரவணபுரத்தில்
கசிந்து—அன்பமைந்து
அயில்—வேலாயுதந்தரித்த
அம்—நன்மைமிகுந்த
கரமிசை-கையின்மீது
தண்டோடு-தண்டாயுதத்துடனும்
திகழ்-விளங்காநின்ற
குருவே-தண்டபாணிக்கடவுளே

27

திகம்பர வங்கண ரம்புயக் கண்ணர் தினந்தொறும
திகம்பர வங்கண மொய்ப்பத் தமரத் திரைவரந
திகம்பர வங்கண ருண்மேனி தோய்ந்து சிரவையில்வை
திகம்பர வங்கண வைத்தாய்கை மாறுன்மெய்ச் சேவனமே

திகம்பர-நிர்வாணத்தன்மையுள்ள
அங்கணர்-பரமசிவனும்
அம்புயக்கண்ணர்—தாமரைக்கண்ணாகியதிருமாலும் தாமரைமலர்மீதுள்ள பிரமனும்
தினந்தொறும்-நித்தியமும்
அதிகம்—மிகுதியாக
பரவு—வணங்கும்படி
அம்-அழகிய
கணம்—கூட்டமானது
மொய்ப்ப-சூழ
தமர—பேரொழியுள்ள
திரை—அலையோடுகூடிய
வரநதி—கங்காநதியில்
கம்பு-சங்கினது
அரவம்—சத்தமிக்க
கண்—இடத்தில்
அருண்மேனி—திருவருள்வடிவம்
தோய்ந்து—கலந்து
சிரவையில்—சிரவணபுரத்தில்
வைதிகம்—வேதநெறி
பரவு-விசாலித்த
அங்கு—அவ்விடத்தைப்போல
அண—பொருந்த
வைத்தாய்—அமைத்தனை இதற்கு
கைமாறு—பிரதிப்பயன்
உன்-உனது
மெய்—உண்மையமைந்த
சேவனம்—ஏவற்றொழிலேயாகும்
ஏ—அசை

28

சேவன மேற்றங் குலவியற் பாலத் திருக்கில்வந்து
சேவன மேற்றங் குமிச்சை யுளத்திற் சிறந்திருக்கச்
சேவன மேற்றங் குரித்தா ளுரித்தாள் சிரவையன்ருட்
சேவன மேற்றங் குறிப்புணர் வார்பதஞ் சென்னியதே.

சேவன்—சிவபெருமானது
அம்—அழகாகிய
ஏற்றம்—மிகுதியும்
குலவு—பிரகாசிக்கும்
இயல்—குணமமைந்த
பாலத்திருக்கில்—நெற்றிக் கண்ணில்
வந்து-அவதரித்து
சே-சிவப்பமைந்த
அனம்—தெய்வயானையம்மை
மேல்—தன்மீது
தங்கும்—நிலைத்துள்ள
இச்சை-காதல்
உளத்தில்—இதயத்தில்
சிறந்திருக்கச்சே—சிறப்பாயமைந் துள்ளபொழுது
வனம்—மலைச்சாரற்கானலை
ஏற்று—பொருந்தி
அங்குரித்தாள்-செனித்தவள்ளி நாயகிபால்
உரித்து—கிழமையை
ஆள்-ஆட்சிப்படுத்திய
சிரவையன்—சிரவணபுரத் தண்டபாணிக்கடவுளது
தாள்-திருவடிக்கு
சேவனம்—வழிபாட்டை
ஏற்று-அடைந்து
அம்-நலமிகுந்த
குறிப்பு-திருவருட்குறிப்பை
உணர்வார்-தெரிபவரது
பதம்-திருவடி
சென்னியது-சிரசின்மேலதாம்
ஏ-அசை

29

சென்னியத் தங்குவித் தாமுக மன்பல செப்பவந்த
சென்னியத் தங்குவித் தாமுக மேற்றவிர் செல்வனென்பாற்
சென்னியத் தங்குவித் தாரகன் ருர்தஞ் சிறப்புரையேல்
சென்னியத் தங்குவித் தாரக நேருஞ் சிரவையையே.

சென்னி-சிரசின்மீது
அத்தம்குவித்து-கைகளைக்கூப்பி
ஆம்-நன்மையான
முகமன்பல-உபசாரமான பல வற்றை
செப்பவந்த—சொல்லுதற் கடைந்த
சென்னி—பாணனே
அ—அந்த
தம்-தமது பரம்பரையான
கு-பூமிக்கு
வித்தாம்-விதையான
முகம்—முகத்தை
ஏற்று-கொண்டு
அவிர்—பிரகாசியாநின்ற
செல்வன்-குமாரன்
என்பால்-என்னிடத்தே
சென்னியத்து-செனித்த காலத்தில்
அம்—அழகை
குவித்தார்-ஒடுக்கினரும்
அகன்ருர்-நீங்கினவருமான
தம்—தலைவருடைய
சிறப்பு-பெருமைகளை
உரையேல்—சொல்லாதே
செல்-செல்லக்கடவாய்
நி-நீ
அத்தம்-திரவியங்களை
குவித்தார்-திரட்டியுள்ளவர்களது
அகம்—மனையானது
நேரும்-மங்களத்தாலொப்பான தாகும்
சிரவையையே—தலைவன்தங்கி யுள்ள சிரவணபுரத்தையே

30

சிரத்தை யகன்றிட ராக்கும் விதிநமன் செந்தமிழ்சி
சிரத்தை யகன்றிட மூர்மன் மதன்செய் சிலுகிலுள்ளச்
சிரத்தை யகன்றிட வெய்த்தேன் சிரவையெந் தேசிகவச்
சிரத்தை யகன்றிட நாடோங்க வைத்தலிற் சேமநல்கே

சிரத்து-சென்னியின்கண்
ஐய—ஐயனே
கன்று-வைநவுறும்
இடர்-இடையூறுகள்
ஆக்கும்-உண்டாக எழுதும்
விதி-பிரமதேவனும்
நமன்-இயமனும்
செந்தமிழ்-சிவந்த தமிழும்
தைய—தழுவிய பொதியை
யிலுண்டாகும்
கன்றிடம்—தென்றற்றேரில்
ஊர்மன்மதன்-ஏறிச்செலுத்தும்
மன்மதனும்
செய்-புரியும்
சிலுகில்-துன்பத்தால்
உள்ளச்சிரத்தை—உன்பாலுள்ள
விசுவாசம்
அகன்றிட-நீங்குதலினல்
எய்த்தேன்-இளைத்தேன்
சிரவை—சிரவணபுரத்தமர்ந்த
எம்-எமது
தேசிக-குமரகுருபரக் கடவுளே
வச்சிரத்து-குலிசாயுதமேந்திய
ஐ—தேவேந்திரனது
அகன்—விசாலித்த
திடம்-திடத்தன்மையை
நாடு-அமராவதியானது
ஓங்கவைத்தலில்-மேற்கொள்ள
அமைத்ததுபோல
சேமம்-சுகத்தை
நல்கு-கொடுத்தருள்
ஏ-அசை

31

சேமக் கலங்கொட்டி நாடக மாடுஞ் சிறப்புடனே
சேமக் கலங்கொட்டி யாற்றிடு பூசைச் சிரவையரச
சேமக் கலங்கொட்டி யொத்துனை யொட்டுந் தியானமுளோஞ்
சேமக் கலங்கொட்டி யக்கங் கழியத் திருக்கண்வைத்தே

சேம—இன்பவைப்பான
கல்-மலைகளிடத்து
அம்-அழகமைந்த
கொட்டி-கொடுகொட்டியென்னும்
நாடகம்—நடனம்
ஆடும்-ஆடியருளும்
சிறப்புடனே—விசேடத்தோடும்
சேமக்கலம்-எறிமணி
கொட்டி—அடித்து
ஆற்றிடும்-செய்கின்ற
பூசை-வழிபாடுகொண்ட
சிரவை—சிரவணபுரத்துக்கு
அரசே-தலைவனே
மக்கலம்-உக்கியழியமாட்டோம்
கொட்டி-கொட்டிப்பூண்டுக்கு
ஒத்து-சமானமாகி
உனை—உன்னையே
ஒட்டும்-நீங்காது சம்பந்தமுறும்
தியானம்-சிந்தனை
உளோம்—உடையோம்
சேம-காவலாகி
கலம்—திருவடியாகிய கப்பலில்
கொள்-கொண்டருள்வாயாக
தியக்கம்—தடுமாற்றம்
திருக்கண்—அழகிய கருணை
கடாக்ஷத்தை
வைத்து-அமைத்து
ஏ-அசை

32

திருக்கம லக்கண்ணி யன்மால் சுரர்க்குமுன் செப்பியவா
திருக்கம லக்கண் ணியமெய் மகிமா திசயவெனைத்
திருக்கம லக்கண்ணி யற்றநொந் தேனின் சிரவையிடை
திருக்கம லக்கண் ணியவின்ப மெய்திடச் சேர்த்தருளே.

திரு-அழகிய
கமலக்கண்-புண்டரீகாட்சம்
இயல்-பொருந்திய
மால்-திருமாலானவர்
சுரர்க்கு-தேவர்க்கு
முன்-ஆதிகாலத்தில்
செப்பிய-சொல்லியருளிய
ஆதி-முதன்மை பெற்ற
ருக்கு-வேதத்தின் சாரமான
அமல-நிர்மலத்தன்மைபெற்ற
கண்ணிய-பெருமைமிகுந்த
மெய்-சத்யமிகுந்த
மகிமாதிசய-மகத்துவமுமற்
புதமுற்றவனே
எனை-அடியேனை

திருக்கம்-வஞ்சகமானது
அமலக்கண்-துன்பம்
இயற்ற-செய்ய
நொந்தேன்-மெலிந்தேன்
சிரவையிடை-சிரவணபுரத்தில்
திரு-தெய்விகத்தன்மையுற்ற
கம-நிறைவையுடைய
லக்கு-குறியை
அண்ணிய-கலந்த
இன்பம்-பேரின்பாநுபவம்
எய்திட-அடையும்படி
சேர்த்தருள்-கூட்டியருள்வாயாக
ஏ-அசை

33

சேரல ரப்பணி யேற்றுண் டருளுஞ் சிரவையெந்தாய்
சேரல ரப்பணி தாக்காநின் றொண்டனென் சீர்படைத்துஞ்
சேரல ரப்பணி நீங்ககில் லேனுட் டிருந்தநின்றாள்
சேரல ரப்பணி யாயென் புன்போதத் தினைவலிந்தே

சேரலா-சேரமானுடைய
அ-அந்த
பணி-ஆலயத்திருப்பணியை
ஏற்று-கைக்கொண்டு
ஆண்டருளும்-ஆட்கொண்டருளிய
சிரவை-சிரவணபுரத்தமர்ந்த
எந்தாய்-எமது தந்தையே
சேரலர்-பகைவர்களது
அப்பணி-அம்பு வரிசைகள்
தாக்கா-அடையப்பெறுத
நின்-உன்னுடைய
தொண்டன்-அடிமை
என்-என்று சொல்லும்
சீர்-சிறப்புத்தன்மையை
படைத்தும்-பெற்றிருந்தும்
சேர்-பொருந்திய

அலர்-பழிச்சொற்களான
அப்பு-பூசுதலையும்
அணி-ஆபரணத்தையும்
நீங்ககில்லேன்-ஒழியாதவனா
கினேன்
உள்-இதயமானது
திருந்த-திருத்தமடைய
நின்-உன்னுடைய
தாள்-திருவடியை
சேர்-கூட்டியருளி
அலர-விரியும்படி
பணியாய்-செய்தருள்வாய்
என்-அடியேனது
புன்-அற்பமாகிய
போதத்தினை-சிற்றறிவை
வலிந்து-நீயேவலிதடைந்து
ஏ-அசை

34

திணைக்கா னலங்கன் றிடாமுறை வேட்கைச் சிலுகினெஞ்சைத்
திணைக்கா னலங்கன் மனந்தெளி வெய்தச் சிரவையிடை
திணைக்கா னலங்கன் றடையருண் ஞானத் திருவடிப்போ
திணைக்கா னலங்கன் மகிழ்ந்தரு ளாயித் தினத்துவந்தே

திணை—அற்பமாகிய
கால்-சந்ததிப்பாரம்பரியம்
நலம்-நன்மையகன்று
கன்றிடா-வாட்டமுறுத
முறை-ஒழுங்கான
வேட்கை—ஆசையின்
சிலுகில்-துன்பத்தில்
நெஞ்சை-இதயத்தை
தின்-உண்ணவைக்கும்
ஐ-ஐம்புலவேட்டையுற்ற
கானல்—பேய்த்தேர் போன்ற
அங்கன்-சரீரமுடையேனது
மனம்-மனமானது
தெளிவு-ஞானத்தெளிவை
எய்த-அடையும்படி
சிரவையிடை-சிரவணபுரத்தில்
திணைக்கானல்—திணைப்புனமாகிய
அங்கு-அவ்விடத்தில்
அன்று-அக்காலத்தில்
அடை-சென்றருளிய
அருள்-அருண்மயமான
ஞான-ஞானமணம் வீசும்
திருவடிப்போதின்-திருவடிமலரின் கண்
ஐ-அழகும்
கான்-பரிசனையும் கொண்டமைந்த
அலங்கல்-கடப்பமாலையை
மகிழ்ந்து—சந்தோடத்துடன்
அருளாய்-கொடுத்தருளவேண்டும்
இத்தினத்து-இந்த நாளில்
வந்து-எழுந்தருளி
ஏ-அசை

35

தினங்கண்ட மான வருள்சிர வையநின் சேவடிப்போ
தினங்கண்ட மானச மாதவச் சீர்சாத் தியங்கைவந்து
தினங்கண்ட மானனி யாமாண் படைந்தபின் சிற்றறிவைத்
தினங்கண்ட மான ருளிய பிராட்டியின் சீர்பெறவே

தினம்-நாடோறும் வரும்
கண்டம்-தத்துக்களை
ஆன-நீங்கும்படி
அருள்-அநுக்கிரகம்புரியும்
சிரவைய-சிரவணபுரத்தையுடைய தண்டபாணிக்கடவுளே
நின்-உன்னுடைய
சேவடி-சிவந்தபாதமாகிய
போதின்-மலரினது
அம்-அழகை
கண்ட-பார்த்த
மானசம்-தியானபாவனையான
மாதவச்சீர்-பெருந்தவச் சிறப்பானது
சாத்தியம்-முடிவடைந்து
கைவந்து-கைவல்லியமாகி
தில்-விருப்பமிக்க
நம்-நமது
கண்தமால்-கண்களானவற்றால்
நனி-மிகுதியாக
ஆம்-ஆகும்
மாண்பு-பெருமை
அடைந்தபின்-பெற்றதன்பிறகு
சிற்றறிவை-தற்போதைய முனைப்பை
தின்-உண்டருள்
அங்கு-அவ்விடத்தில்
அண்ட-நெருங்க
மானருளிய-மான்பெற்ற
பிராட்டியின்-வள்ளிநாயகினது
சீர்-சிறப்பை
பெற-அடையும்வண்ணம்
ஏ-அசை

36

சீரங்க மாயவன் சீதகா வேரிமத் திக்கவினர்
சீரங்க மாயவன் றன்மரு காமெய்ச் சிரவையுளாய்
சீரங்க மாயவன் புற்பவ மித்துடன் றீர்ந்தொழியச்
சீரங்க மாயவன் பீந்தருள் வாயிது சென்மத்தினே

சீ-இலக்குமிதேவியமைந்த
ரங்க-இரங்கநாதன்
மாயவன்-மாயன் என்னும் பெயருடன்
சீத-குளிர்ந்த
காவேரி-காவேரி நதியின்
மத்தி-நடுவில்
கவினர்-அழகமைந்த
சீரங்கம்-சீரங்கபட்டினம்
ஆயவன்-ஆகிய திருமாலினது
மருகா-மருமகனே
மெய்-உண்மையமைந்த
சிரவையுளாய்-சிரவணபுரத்துள்ள தண்டபாணிக்கடவுளே
சீரம்-பாலே
கம்-மூடியுள்ள தனம்படைத்த
ஆய்-தாய்மார்களாலடைந்த
வன்பு-மறமமைந்த
உற்பவம்-பிறவியை
இத்துடன்-இதனோடு
தீர்ந்தொழிய-இல்லாதுநீங்கும்படி
சீர்-சிறப்பாகிய
அங்கம்-சரீரத்தை
மாய-இறக்க செய்ய வல்லதான
அன்பு-பக்திப் பெருக்கத்தை
ஈந்தருள்வாய்-கொடுத்தருள்வாய்
இது சென்மத்தின்-இப்பிறவியிலேயே
ஏ-அசை

37

சென்மத் தியக்கம் பொலிகாச் சிரவையெந் தேசிகனே
சென்மத் தியக்கம் புகுததி யென்னத் திரிமலத்தாந்
சென்மத் தியக்கம் பலத்திளைத் தேன்சிற் சுகம்பொலியச்
சென்மத் தியக்கம் பெறப்பணி யாய்முத் தியிற்புகவே

செல்-மேகத்தையும்
மத்திய-கள்ளையும்கொண்ட
கம்-தலையானது
பொலி-வளமையுற்ற
கா-சோலைகளையுடைய
சிரவை-சிரவணபுரத்தமர்ந்த
எம்-எமது
தேசிகனே-குமரகுருபரனே
செல்-நுழைந்த
மத்து-மத்தினது
இயக்கம்-அலைச்சல்
புகு-அடையப்பெற்ற
ததியென்ன-தயிரென்னும்படி
திரிமலத்து-மும்மலத்தாலும்
ஆம்—ஆகிய
சென்மத்தியக்கம்- பிறப்புமயக்கம்
பலத்து—பெருக்கமுற்று
இளைத்தேன்—மெலிந்தேனாகிய அடியேன்
சிற்சுகம்-ஞானவின்பத்தில்
பொலிய-மிகுந்துவாழ
செல்-ஞானசக்தி போன்று விளங்கும்
மத்தி-நடுநிலைமைபெற்ற
அக்கம்-கண்ணை
பெற-அடையும்படி
பணியாய்-கொடுத்தருள்வாய்
முத்தியில்-பிறவாநிலையில்
புக-நுழைந்து வாழுமாறு
ஏ-அசை

38

தியத்தத் திருக்கு மலமாயை கன்மமென் சிந்தையிற்பைத்
தியத்தத் திருக்கு மிறைசெய்ய நொந்தேன் சிரவையிற்சத்
தியத்தத் திருக்கு மரகுரு வேதயை சேர்ந்தவிர்சித்
தியத்தத் திருக்கு முடிப்பொரு ணல்காய் திகைப்பறவே

| | |
|---|---|
| தியத்த-தள்ளக்கூடிய | திரு-அழகமைந்த |
| திருக்கு—வஞ்சகமிக்க | குமரகுருவே-குமரகுருபரக் கடவுளே |
| மலமாயைகன்மம்- மும்மலங்களும் | |
| என்-அடியேனுடைய | தயை-கிருபை |
| சிந்தையில்—இதயத்தில் | சேர்ந்து-பொருந்தி |
| பைத்திய-மதிகேடான | அவிர்—பிரகாசமிகுந்த |
| தத்து—ஆபத்தை | சித்தி—ஞானமயமான |
| இருக்கும்-நிலைத்திருக்கும் | அத்தத்து—பொருளைக்கொண்ட |
| மிறை-ஒழுங்கீனங்களை | இருக்கு-வேதத்தினது |
| செய்ய—புரிதலினால் | முடி-உச்சிமீதமைந்த |
| நொந்தேன்—வருத்தமுற்றேன் | பொருள்—செம்பொருளை |
| சிரவையில்—சிரவணபுரத்தில மர்ந்த | நல்காய்—கொடுத்தருள்வாய் |
| | திகைப்பு-மயக்கம் |
| சக்தி—ஞானசக்திவேலணிந்த | அற—நீங்கும்படியாக |
| அத்த-கையையுடைய | ஏ-அசை |

39

திகைத்தல மந்த மிகுந்திட வோங்குஞ் சிலைகளிற்சத்
திகைத்தல மந்த விளங்குஞ் சிரவையெந் தேவநெஞ்சந்
திகைத்தல மந்த செயலறிந் துந்தெரி யாரிலென்று
திகைத்தல மந்த மொழித்தரு ளுள்ளந் திருப்புதியே.

| | |
|---|---|
| திகை-திக்குகளாகிய | அலமந்த—சுழன்ற |
| தலம்-இடங்களானவை | செயல்-செய்கை |
| அந்தம்—அழகு | அறிந்தும்—உணர்ந்தேயும் |
| மிகுந்திட-அதிகமாகும்படி | தெரியாரில்-அறியாதவர்போல |
| ஓங்கும்-உயர்ந்துள்ள | என்-அடியேனது |
| சிலைகளில்—மலைமுடிகளில் | துதி-தோத்திரங்களை |
| சத்தி-வேலாயுதமானது | கைத்தல்—வெறுத்தலாகிய |
| கைத்தலம்—திருக்கரத்தில் | அமந்தம்-உக்கிரத்தன்மையை |
| அந்த-பொருந்தும்படி | ஒழித்து-நீக்கி |
| விளங்கும்-பிரகாசிக்கும் | அருள்-திருவருட்சிறப்புற்ற |
| சிரவை-சிரவணபுரத்தமைந்த | உள்ளம்—திருவுள்ளத்தை |
| எம்-எமது | திருப்புதி—திருப்பிநினைத்தருள் வாயாக |
| தேவ—தண்டபாணிக்கடவுளே | |
| நெஞ்சம்-இதயமானது | ஏ-அசை |
| திகைத்து-மயங்கி | |

40

திருப்பா தகமலங் கட்காட் படுத்தியென் சிந்தையினைத்
திருப்பா தகமலங் கட்டூ ழியத்தைச் செறிதத்தென்மு
திருப்பா தகமலங் கட்கண் டுனைத்துதி செய்தனங்கர்த்
திருப்பா தகமலங் கட்காச் சிரவைச் சினகரனே.

திரு-அழகிய
பாதகமலங்கட்கு—பாததாமரைகளுக்கு
ஆட்படுத்தி-அடிமையாக்கி
என்-அடியேனது
சிந்தையினை-இருதயத்தை
திருப்பாது- மீட்டுக்கொள்ளாமல்
அகம்-உள்ளே
மலங்கு- கலங்கச்செய்யும்
அட்டூழியத்தில்-குரூரத்தன்மையை
செறிதத்து-நெருங்கவைத்தது
என்—யாதுகாரணம்
முதிர்-மிகமேலான
உப்பா-இனிமையுள்ளோனே

தகம்—உனக்கடிமையாந்தகுதி
அலம்—அல்லேமெனினும்
கண்-கண்களால்
கண்டு-தரிசித்து
உனை-உன்னை
துதிசெய்தனம்-தோத்திரம்புரிந்தோம்
கர்த்திரு-நாமே கர்த்தா என்னும்
பாதகம்-துரோகத்தன்மை
அலம்-போதுமானது
கள்-தேனிறைந்த
கா-சோலைகளையுடைய
சிரவை-சிரவணபுரத்துள்ள
தினகரனே-கோயிலில் விளங்கும்தலைவனே

41

சினகரத் திற்பதி தத்தன்மை பெற்றவென் றீயவன்னெஞ்
சினகரத் திற்பதி வாயோ கௌமாரர் திரள்சிரவைச்
சினகரத் திற்பதி யாயோங்கித் தண்டணி தேசிகமெய்ச்
சினகரத் திற்பதி கந்தங்கு மேன்மைச் சிவகுருவே

சின—கோபத்துக்கும்
கரத்து—விடத்துக்கும்
இல்-இடமான பாம்புபோன்ற
பதிதத்தன்மை-நிலைபேறில்லாதநெறுத்தன்மை
பெற்ற-அடைந்த
என்-அடியேனுடைய
தீய-கெட்ட
வன்—கடினமுற்ற
நெஞ்சில்-இருதயத்தினிடம்
நகரத்தில்-பட்டினம்போன்று
பதிவாயோ—அகலாதிருப்பாயோ
கௌமாரர்-கவுமாரத்தொண்டர்கள்
திரள்—நெருங்கிய
சிரவை-சிரவணபுரத்துள்ள

சினகரத்தில்- கோயிலின்கண்
பதியாய்-தலைவனாகி
ஓங்கும்-உயர்ந்துள்ள
தண்டணி-தண்டாயுதந்தாங்கிய
தேசிக- தமரகுருபரக்கடவுளே
மெய்-உண்மையான
சின்-ஞானகாயத்தினிடம்
அகரத்து—அகரவுயிர்போல
இற்பு-பேரின்பாநுபவம்
அதிகம்-மிகுதியாகும்படி
தங்கும்-நிலைத்திருக்கும்
மேன்மை-மகிமையையுடைய
சிவகுருவே-சாமிநாதனே

42

சிவந்தங்க மாற்றிய காலனெய் தாமுனந் தேசமைசு
சிவந்தங்க மாற்றிய லுந்தகை போலச் சிரவையிற்க
சிவந்தங்க மாற்றிய மோவா திசையுப தேசநல்காய்
சிவந்தங்க மாற்றிய மாதவத் தத்தைத் திருப்பெறவே

சிவந்து-கோபித்து
அங்கம்—சரீரத்தை
மாற்றிய-வேறுபடுத்தும்படி
காலன்—இயமன்
எய்தாமுனம்—அடைவதன் முன்பாக
தேசமை-பிரகாச மிகுந்த
சுசி-அக்கினியினிடம்
வம்—அடையப்பெற்ற
தங்கம்—பொன்னனது
மாற்று-தரம்
இயலும்-ஏறும்
தகைபோல-தகுதிபோன்று
சிரவையில்-சிரவணபுரத்தில்
கசிவம்-உருகுந்தன்மையுடைய எமக்கு
தங்கு-நிலைபெற்ற
அம்-அழகிய
ஆற்று-வழிபாடுடைய
இயம்—வாக்கியமானது
ஓவாது-நீங்காது
இசை-முழங்குவதான
உபதேசம்-அருளநுக்கிரகத்தை
நல்காய்-கொடுத்தருள்வாயாக
சிவந்து-சிவப்படைந்து
அம்-அழகுற்ற
கம்-தலையிலமைந்த மூக்கைப் பெற்ற
ஆற்றிய-செய்த
மாதவ-பெருந்தவததைக் கொண்ட
தத்தை—அருணகிரிநாதரான கிளியானது
திருப்பெற-தெய்வீகத்தை யடையும்படி
ஏ-அசை 43

திருப்பெற்ற வாகன மூரும் பரமன்செந் தீவிழிவாய்த்
திருப்பெற்ற வாகன வானே சிரவையிற் றீதிலெனைத்
திருப்பெற்ற வாகன நீழலொத் தோட-மெய்ச் சீர்த்திநிறை
திருப்பெற்ற வாகன வோநன வேகொல்சந் தேகத்ததே

திரு-அழகமைந்த
பெற்றவாகனம்-இடப வாகனத்தில்
ஊரும்-ஆரோகணித்தருளும்
பரமன்-சிவபெருமானது
செந்தீவிழி-சிவந்த அக்கினிக் கண்ணின்
வாய்—இடமாக
திரு-தெய்வீக வடிவத்தை
பெற்றவா-பிறப்பித்துக் கொண்டவனே
கனவானே-பிரபுவே
சிரவையில்-சிரவணபுரத்தில்
தீதில்-தீமையில்
எனை-அடியேனை
திருப்பு-மீட்கின்றதும்
எற்று-அடிக்கின்றதுமான
அவா—ஆசையை
கன-மேகத்தினது
நீழலொத்து-நிழலைப்போல
ஓட—அகன்று நீங்க
மெய்-உண்மையான
சீர்த்தி-சிறப்பு
நிறை-நிறைவுற்ற
திரு-செல்வத்தை
பெற்றவா-அடைந்தவாறு
கனவோ-கனவுதானோ
நனவேகொல்-சாக்கிரந்தானோ அல்லவோ என்னும்
சந்தேகத்து-ஐயத்தையுடைய தாகும்
ஏ-அசை 44

தேகத் திசையுந் துயர்ப்பிறப் பின்றிறந் தேர்தரிற்சந்
தேகத் திசையுந்து மென்னே யணிச்சிர வைத்தயைச்சிந்
தேகத் திசையுந் துருப்பரியோன்சோ தரதிகழ்வி
தேகத் திசையுந் துளத்தோ டமைதீ வினையறவே

| | |
|---|---|
| தேகத்து-உடம்பின்கண் | இசை—இனிமையுள்ள |
| இசையும்-பொருந்தும் | உந்துரு-பெருச்சாளியான |
| துயர்-துன்பமயமான | பரியோன்-வாகனமுள்ள விநாயகரது |
| பிறப்பின்றிறமை-பிறவியின் நிலைமையை | சோதர-துணைவனே |
| தேர்தரில்-ஆராயின் | திகழ்-பிரகாசமிக்க |
| சந்தேக-ஐயமுறுதலான | விதேகத்து-தேகவிமோசன முற்ற நிலையில் |
| திசை-நிலையின்கண் | இசை—கூட்டிவைத்து |
| உந்தும்-தள்ளிவிடும் | உந்து-செலுத்தியருள் |
| என்னே-ஆச்சரியம் | உளத்தோடு-இதயத்துடன் |
| அணி-அழகமைந்த | அமை-பொருந்தியுள்ள |
| சிரவை-சிரவணபுரத்தமர்ந்த | தீவினை-கொடுவினைகளை |
| தயை-கருணையாகிய | அற-நீங்கும்படியாக |
| கந்தே-சமுத்திரமே | |
| சித்து-சத்திக்கும் | ஏ-அசை |

45

தீவினை வாய்ப்பட் டதனுற் செலுத்துந் திசையிசையுந்
தீவினை வாய்ப்பட் டணிமாடை தேடித் திகைத்தனன்மெய்த்
தீவினை வாய்ப்பட்ட மூர்த்திதண் டங்கைச்சிரவை கொளா
தீவினை வாய்ப்பட் டயத்தொண்ட னுகுமெய்த் தேசருளே

| | |
|---|---|
| தீவினை-கொடியகன்மத்தின் | வாய்ப்பு-கிடைத்தற்கரிய |
| வாய்பட்டு-இடத்திற்பொருத்தி | அட்டமூர்த்தி-எண்வகை வடிவத்தனே |
| அதனுல்-அதன் காரியத்தால் | |
| செலுத்தும்-தள்ளுகின்ற | தண்டு-தண்டாயுதந்தரித்த |
| திசை-திக்குகளினிடத்தில் | அங்கை-அழகிய கரத்தையுடைய |
| இசையும்-பொருந்தியுள்ளதான | சிரவைகொள்-சிரவணபுரத்தைக் கொண்ட |
| தீவில்-தீவுகளில் | |
| நைவாய்-தளர்வாகி | ஆதீ-முதல்வனே |
| பட்டு-வஸ்திரமும் | வில்—பிரகாசத்தால் |
| அணி-ஆபரணமும் | நை-குழைவமையும் |
| மாடை-பொன்னும் | பட்டய-பிரசித்திபெற்ற |
| தேடி-ஈட்டி | தொண்டனுகும்-அடிமையாகும் |
| திகைத்தனன்-மயங்கினேன் | மெய்-சத்திய வடிவமான |
| மெய்-உண்மையாகிய | தேசு-கீர்த்திப் பிரதாபத்தை |
| தீவின்-இனிமைமிக்க | அருற்-கொடுத்தருள்வாயாக |
| ஐ-அழகமைந்த | ஏ-அசை |

46

தேசத் தமையணி மாற்றுத சோலைச் சிறப்பிசைந்து
தேசத் தமையணி வெற்பினத் தாடற் சிரவையின்வித்
தேசத் தமையணி மால்போலுஞ் சித்தித் திருப்பொலியுத்
தேசத் தமையணி செய்வதெந் நாளது செப்புதியே

தேசு-சூரியனது
அத்தல்-கரமாகிய கிரணங்கள்
மை-இருளை
அணி-நெருங்கி
மாற்றுத-நீங்குதலில்லாத
சோலை-மரக்கூட்டங்களின்
சிறப்பு-மேன்மை
இசைந்து-பொருந்தி
தேசத்து-பூமியிலுள்ள
அமையணி-மூங்கில்வரிசையுற்ற
வெற்பினத்து-மலைக்குலங்களில்
ஆடல்–நடனம் புரியும்
சிரவையின்-சிரவணபுரத்தின்
வித்தே–முதலானவனே
சத்த–ஒலிபொருந்திய
மை-நீருண்ட மேகம்போன்ற
அணி-அழகமைந்த
மால்போலும்-திருமாலையொத்த
சித்தி-சித்திவல்லபங்களான
திருப்பொலி-செல்வம் பெருகுதலான
உத்தேசத்தம்– விருப்பமுடைய எமக்கு
ஐ–தலைமையான
அணி-அலங்காரம்
செய்வது-புரிவது
எந்நாள்-எக்காலம்
அது–அதனை
செப்புதி–சொல்லியருள்வாயாக
ஏ-அசை 47

செப்பத் தினைவன மேலாகும் வேடச் சிறுமியணிச்
செப்பத் தினைவன மாக்கிணைச் செப்பினிச் செங்கனிவாய்ச்
செப்பத் தினைவன கத்தென்னு மாடற் சிரவையவுட்
செப்பத் தினைவன வேடரை யோட்டித் தியக்கறவே

செப்ப-செவ்வையாகிய
தினைவன-தினைப்புனத்தின்
மேலாகும்-இடத்திற்காவலாகிய
வேடச்சிறுமி–வள்ளிநாயகியின்
அணி-ஆபரணமணிந்த
செப்பத்தினை-மார்பினை
வனமாக்கு-அழகுசெய்கின்ற
இணை-இரண்டான
செப்பினில்-சிமிழ்போலுந் தனத்திலும்
செம்–சிவந்த
கனி-கோவைக்கனிபோன்ற
வாய்–வாயிற்பிறக்கும்
செப்பு–சொல்லினது
அத்தில்-இசைப்பிலும்
நைவன்-தளர்வேன்
அகத்து-இதயத்தில்
என்னும்-என்பதான
ஆடல்–திருவிளையாட்டுடைய
சிரவைய-சிரவணபுரத்தையுடைய குமரகுருபரக் கடவுளே
உள்-இதயத்தை
செப்ப–ஒப்புரவமைய
தின்–உண்டருள்வாயாக
ஐ–ஐம்புலன்களான
வன–காட்டிலமைந்த
வேடரை-வேடுவர்களை
ஓட்டி–கடத்தி
தியக்கற-மயக்கமுறும்படியாக
ஏ-அசை

48

தியக்கங் கடத்தி யருள்சிர வைப்பதிச் சேயின்விபூ
தியக்கங் கடத்தி னினமான முற்றுறத் தீர்த்தவிர்மத்
தியக்கங் கடத்தி யெழுமையின் மிஞ்சியற் சிற்சுகம்வித்
தியக்கங் கடத்திய லானந்த நீர்பெய் திடச்செயுமே

தியக்கம்- மனச்சோர்வை
கடத்தி-அகலச்செய்து
அருள்-அநுக்கிரகம்புரியும்
சிரவைப்பதி—சிரவணபுரத்துள்ள
சேயின்—குமரக்குருபரக்கடவுளது
விபூதி-திருநீறும்
அக்கங்கள்-உருத்திராக்கங்களும்
தத்தின்-ஆபத்தின்
இனம்—கூட்டங்கள்
ஆன-நீங்கும்படியாக
முற்றுற-முழுமையும்
தீர்த்து-ஒழித்து
அவிர்-பிரகாசியாநின்ற
மத்திய-நடுநிலையிலுள்ள
கங்கு-எல்லையில்
அடு-நெருங்கச்செய்து
அத்தி-சமுத்திரங்கள்
எழுமையின்—ஏழினும்
மிஞ்சிய-அதிகம்பெற்றதான
இயல்-இயற்கையுடைய
சிற்சுகம்—ஞானவின்பத்தை
வித்தி-பதித்து
அக்கங்கள்-கண்களில்
தத்து-பாயத்தகுந்த
இயல்-தன்மைபெற்ற
ஆனந்தநீர்-ஆனந்தபாட்பம்
பெய்திட-பொழியும்படியாக
செயும்-புரிந்தருளும்
ஏ-அசை

49

திடத்தந்த வாரண வத்திரன் சோதர சீர்ச்சிவற்கோ
திடத்தந்த வாரண மாருப தேசத் தினையென்மெய்க்கா
திடத்தந்த வாரண வீறுட ஞகமச் சீலமுள்வாய்ந்
திடத்தந்த வாரண மாற்றிட லாம்சிர வணத்தரசே

திட-உறுதியாகிய
தந்த-கொம்பையுடைய
வாரணவத்திரன்-யானைமுக
முள்ளவிநாயகமூர்த்தியின்
சோதர-சகோதரனே
சீர்—சிறப்புள்ள
சிவற்கு—சிவபெருமானுக்கு
ஓதிடு-சொல்லியருளிய
அத்தம்—பொருளின்பம்
தவா-நீங்காத
ரணம்-உரிமையுள்ள
உபதேசத்தினை-மகாவாக்கி
யத்தை
என்—அடியேனுடைய
மெய்-சத்தியமயமான
காதிடத்து-செவியின்கண்
அந்த—முடிவாகிய
ஆரண-வேதத்தினதும்
ஈறுடன்-உபநிடதத்தினதும்
ஆகம-ஆகமத்தினதுமான
சீலம்-நல்லறிவு
உள்-உள்ளத்தில்
வாய்ந்திட-பொருந்திடும்படி
தந்து-கொடுத்தருளி
அவா-ஆசையான
ரணம்—புண்பாடுகளை
ஆற்றிடலாம்—ஆறப்புரிவதாகும்
சிரவணத்தரசே—சிரவணபுரத்துத்
தலைவனே

50

**திறவா னகத்தை யலைவாம பாகத் தினிலிருத்தித்**
**திறவா னகத்தை யகுறமின் னைவலத் திற்பொருத்துந்**
**திறவா னகத்தை யணியார் சிரவையிற் சீர்த்தவிரத்**
**திறவா னகத்தை யமிலது காணத் தெரிசனமே**

திற—உறுதியான
வானக-தெய்வலோகத்துள்ள
தையலை-தெய்வயானையை
வாமபாகத்தினில்- இடப்பாகத்தில்
இருத்தி-அமைத்து
தில்-ஆசை
தவா-நீங்காத
நகத்து-குறிஞ்சிநிலத்துள்ள
ஐய-அழகிய
குறமின்னை-வேடர்மகளை
வலத்தில்-வலப்பாகத்தில்
பொருத்தும்—இசையவைக்கும்
திறவான்-வலிமையுள்ளவன்
அகத்தை-அடியேனதுள்ளத்தை
அணியார்-அழகுநிறைந்த
சிரவையில்—சிரவணபுரத்தின்பால்
சீர்த்து-சிறப்புற்று
அவிர—பிரகாசிக்கும்படியாகவும்
திறவான்-திறந்தானில்லை
நகத்து-தனது திருவடிநகத்தால்
ஐயமிலது-சந்தேகமில்லாமல்
காண்—விழிகொண்டுபார்க்கும் படியாகவும்
தெரிசனமே—காட்சியை

51

**தெரிசித் தமையத் திருக்காட்சி தம்புக டீர்ந்தொழியத்**
**தெரிசித் தமையத் திருக்காட்சி கண்டு தெருண்டுனையே**
**தெரிசித் தமையத் திருக்காட்சி யீந்து சிரவையிலே**
**தெரிசித் தமையத் திருக்காட்சி ஞானத் திருவருளே**

தெரி—ஆராய்தலான
சித்தம்—சித்தமானது
ஐயத்து-சந்தேகமான
இரு-பெரிய
காள்-கரிய
சிதம்புகள்—பதனழிவுகளை
தீர்ந்தொழிய-அகன்றுநீங்க
தெரி-காட்டக்கூடிய
சிந்து—ஞானத்தன்மை
அமை-அமைந்த
அ-அந்த
திரு-அழகிய
காட்சி-கண்களால்
கண்டு-பார்த்து
தெருண்டு-தெளிவடைந்து
உனையே-உன்னையே
தெரிசித்து-தரிசனம்புரிந்து
அமைய-அடங்கும்படி
திரு-தெய்விகத்தன்மைவாய்ந்த
காட்சி—அற்புதத்தை
ஈந்து-கொடுத்து
சிரவையிலே-சிரவணபுரத்தின் கண்
தெரி-தோன்றுகின்ற
சித்த-சித்தனே
மையத்து-நடுநிலையிலுள்ள
இருக்கு-வேதாந்தத்தின்
ஆட்சி—ஆளுந்தன்மையுற்ற
ஞான-அறிவுமயமான
திரு-செல்வத்தை
அருள்-அருள்வாயாக
ஏ—அசை

52

திருவருட் கண்டந் தரங்கத்த ராய்த்தளர் சேண்வதியுந்
திருவருட் கண்டந்த மில்லாவின் போங்கமுன் செப்பவிசை
திருவருட் கண்டந்த விர்த்தாள்வை வேற்கைச் சிரவையமெய்த்
திருவருட் கண்டந்த டிச்சிறி யேற்குளத் தெம்பருளே

திருவர்—இலக்குமி நாயகரான் திருமால்
உட்கு-அச்சமிகுதி
அண்டு-நெருங்கிய
அந்தரங்கத்தராய்-உள்ளத்தை யுடையவராய்
தளர்-மெலிவடைந்த
சேண்—அமராவதியில்
வதியும்—தங்கியுள்ள
திருவர்-செல்வத்தையுடை தேவர்கள்
உள்-நெஞ்சத்தில்
கண்டு-தெரிந்து
அந்தமில்லா—அளவில்லாத
இன்போங்க-சுகமிகுதிபெற
முன்-முன்காலத்தில்
செப்ப—சொல்லிய
இசை—பொருந்தியுள்ள
திரு-தெய்வீகத்தன்மையுள்ள
அருள்-பராசக்திமயமாகி
கண்டம்—ஆபத்துக்களை
தவிர்த்து-நீக்கி
ஆள்-ஆண்டருளும்
வை—கூர்மைபொருந்திய
வேற்கை—வேலாயுதமேந்திய கரத்தைக்கொண்ட
சிரவைய-சிரவணபுரத்துள்ளவனே
மெய்-உண்மையான
திரு—மனத்தைக்கவரும்
அருட்கண்-அருண்மயமான கண்ணை
தந்து-கொடுத்து
அடிச்சிறியேற்கு-அடிமையான எளியேனுக்கு
உள- இதயத்தில்
தெம்புஅருள்-உறுதிகொடுத்தருள்
ஏ-அசை

53

தெம்பற் றலையும்பல் போலே யுலகச் சிலுகிலுளத்
தெம்பற் றலையும்பல் வாதனை தீரச் சிரவையமுன்
தெம்பற் றலையும்பல் சாலச்செய் சாலமெய்ச் சிங்கனைநேர்
தெம்பற் றலையும்பல் லத்தாற் றொலைத்தலிற் சேதஞ்செய்யே

தெம்பல்-சேறுள்ள
தலை- இடத்திலகப்பட்ட
உம்பல்போலே—யானையைப்போல
உலக-பூமியிலுள்ள
சிலுகில்-துன்பத்தில்
உளத்தெம்பு-உள்ளத்துறுதி
அற்றலையும்—அகன்று சுழலும்
பல்-அநேகவிதமான
வாதனை—சஞ்சலங்களும்
தீர—நீங்கும்படி
சிரவைய-சிரவணபுரத்தரசே
முன்-முற்காலத்தில்
தெம்-பகைமையை
பற்றல்—பற்றிய
ஐ-அழகிய
உம்பல்—எழுச்சிகளை
சாலச்செய்—மிகுதியாகப்புரிந்த
சாலமெய்-மாயாவடிவமுற்ற
சிங்கனை-சிங்கமுகாசுரனை
நேர்-பொருத
தெம்-யுத்தகளத்தில
பல்-பல்லுடன்கூடிய
தலையும்—தலைகளையும்
பல்லத்தால்-அம்புகளால்
தொலைத்தலில்-நீக்கியதுபோல
சேதம்-அழியும்படி
செய்-செய்தருள்வாயாக
ஏ—அசை

54

சேதாம் புயங்கட் கவிழ்கமழ் வாவிச் சிரவையர
சேதாம் புயங்கட் சமன்றா துவருயிர் தெட்டவரச்
சேதாம் புயங்கட் டழைவே லுடன்பைஞ் சிகிப்பிடரின்
சேதாம் புயங்கட் டடியேற் கருள்செயஞ் சேலெனவே.

சேதாம்புயம்-செந்தாமரை மலர்கள்
கள்கவிழ்-தேனைப்பொழியும்
கமழ்—வாசனைமிகுந்த
வாவி-தடாகஞ்சூழ்ந்த
சிரவை—சிரவணபுரத்துள்ள
அரசே-தண்டபாணிக்கடவுளே
தாம்பு-பாசத்தை
உய்-செலுத்தி
அங்கன்-அவ்விடத்தில்
சமன்—இயமனது
தூதுவர்-கிங்கரர்கள்
உயிர்-எனதாவியை
தெட்ட—கவரும்படி
வரச்சே-வருங்காலத்தில்
தாம்—தேவரீர்
புயம்-முன்கையின்
கண்-இடத்தில்
தழை—தழைந்துள்ள
வேலுடன்-வேலாயுதத்தோடு
பைஞ்சிகி-பச்சைமயிலினது
பிடரின்—முதுகின்
சே-மேலாக
தாம்-தாவிவந்து
புய்-அச்சத்தை
அங்கு-அவ்விடத்திலேயே
அட்டு-சங்கரித்து
அடியேற்கு—அடியேனுக்கு
அருள்செய்—திருவருள்பாவித் தருள்
அஞ்சேல்-பயப்படேல்
என-என்றுரைத்து
ஏ-அசை

55

சேலயி லாகவந் தம்பெற் றகண்களிற் சேர்பணியிற்
சேலயி லாகவந் தன்னின் மருட்டுந் திருவனையார்
சேலயி லாகவந் தங்கமண் கையர்பொய் தீர்த்தெதிரஞ்
சேலயி லாகவந் தன்பீந் தருளாஞ் சிரவையனே

சேல்-மீனும்
அயிலாக-வேலாயுதமாகவும் உவமிக்கும்
அந்தம்—அழகை
பெற்ற-அடைந்த
கண்களில்-விழிகளிலும்
சேர்-பொருந்திய
பணியில்-ஆபரணத்திலும்
சேலையில்-ஆடையினது
இலாகவம்தன்னில்- சாமர்த்தியத்திலும்
மருட்டும்-மயங்கப்புரியும்
திருவனையார்-இலக்குமிபோன்ற அழகமைந்தமாதரதும்
சேலை-அசோகமரத்தை
இல்லாகு-கோயிலாகும்
அவம்-அவத்தன்மை
தங்கு-பொருந்திய
சமண்-சமணர்களாகிய
கையர்-கீழ்மக்களதுமான
பொய்-மோசத்தை
தீர்த்து—நீக்கி
எதிர்—விழிகளின்முன்பாக
அஞ்சேல்-பயப்படாதேயென்று
ஐயில்-தலைவனில்
ஆக-ஞானோதயமுண்டாக
வந்து—எழுந்தருளி
அன்பு-பத்திப்பெருக்கத்தை
ஈந்தருள்-கொடுத்தருள்வாயாக
எம்-எமது
சிரவையனே-சிரவணபுரத்தை யுடைய கடவுளே

56

**சிரவணக் கந்த மிசைமான் மருகனைச் செல்வநல்வைச்**
**சிரவணக் கந்த நசையோன் குமாரனைச் சீர்பொலியுஞ்**
**சிரவணக் கந்த சுவாமியை யன்பிற் றினந்தினமுஞ்**
**சிரவணக் கந்தவி ராதவர் மாதவத் தேசினரே**

சிரவணக்கு-திருவோணத்துக்கு
அந்தம்-அழகை
இசை-பொருந்துவிக்கும்
மால்-திருமாலினது
மருகனை-மருமகனை
செல்வ-பாக்கியத்தன்மையுள்ள
நல்-நல்ல
வைச்சிரவண-குபேரனுக்கு
கந்த-வாசனைமிக்க
நசையோன்-தோழனுன பரமசிவனது
குமாரனை—புத்திரனை
சீர்-சிறப்பு
பொலியும்-வளர்ந்தோங்கும்
சிரவண-சிரவணபுரத்தமர்ந்த
கந்தசுவாமியை-குமரகுருபரனை
அன்பில்-பத்திப்பெருக்கிஞல்
தினந்தினமும்-நாடோறும்
சிரவணக்கம்-தலையாரக் கும்பிடுதல்
தவிராதவா—நீங்காதவர்
மாதவ-பெருந்தவதைதயடையும்
தேசினர்-கீர்த்திப்பிரதாபத்தோரா வார்
ஏ-அசை

57

**தேசத் தியங்கைய முற்றுள்ளம் வாடச் சிலைக்குறவர்**
**தேசத் தியங்கைய னேயணி கானுஞ் சிரவையின்வித**
**தேசத் தியங்கைய கற்றுதென் சிந்தை செழிப்புறமீ**
**தேசத் தியங்கைய மைந்தா லயத்தைச் சிவணநில்லே**

தேசு-பிரகாசமிகுந்த
அத்தி-தெய்வயானையம்மை
அங்கு-கந்தகிரியில்
ஐயமுற்று-சந்தேகம் பொருந்தி
உள்ளம்-இதயமானது
வாட-தளர்வடையும்
சிலை-வில்லேந்திய
குறவர்-வேடர்கள்வசிக்கும்
தேசத்து-வள்ளிமலைக்கண்
இயங்கு—நடந்தருளிய
ஐயனே-சுவாமியே
அணிகானும்—அழகுமிகுந்த
சிரவையின்-சிரவணபுரத்தினது
வித்தே-விதைபோன்றவனே
சத்தியம்-உண்மையை
கையகற்றுது-கைவிடாமல்
என்—அடியேனுடைய
சிந்தை-இருதயமானது
செழிப்புற-வளப்பம்பொருந்த
மீதே-அதனிடம்
சத்தி-வேலாயுதம்
அம்—அழகிய
கையமைந்து-கரத்திற்பிடித்து
ஆலயத்தை-கோயிலை
சிவண-ஒக்கும்படியாக
நில்-நிலைத்தருள்வாயாக
ஏ-அசை

58

சிவையா முடம்பிடி வைத்தகை யாயிச் செகத்திசையி
சிவையா முடம்பிடி யாணவம் வேரறத் தீர்த்துளக்க
சிவையா முடம்பிடி யாவண முன்மெய்ச் சிரவையிலா
சிவையா முடம்பிடி மேன்மேலு மோங்கித் திருப்பெறவே

சிவையாம்-பராசக்தியான
உடம்பிடி-வேலாயுதம்
வைத்த-தரித்துள்ள
கையா-கரத்தையுடையோனே
இ-இந்த
செகத்திசை—உலகத்தமைந்த
இசிவை—இழுப்பை
ஆம்-உண்டாக்குகிற
முடம்-முடத்தன்மையை
பிடி-பெற்றுள்ள
ஆணவம்-ஆணவமலத்தை
வேரற-மூலமறும்படி
தீர்த்து-தவிர்த்து
உள-உள்ளத்தில்
கசிவை-குழைவை
ஆம்-ஆகும்படி
உடம்பு-சரீரம்
இடியாவணம்-வீழாதவண்ணம்
உன்-உனது
மெய்—சத்தியமயமான
சிரவையில்—சிரவணபுரத்தில்
ஆசி-ஆசிர்வாதம்
வை—வைத்தருள்
யாம்-அடியேம்
உடம்-உடனுசய்க்க
பிடி-நம்பிக்கை
மேன்மேலும்-மேலுமேலும்
ஓங்கி-வளர்ந்து
திரு-தெய்வீகத்தை
பெற—அடையும்பொருட்டு
ஏ-அசை

59

திரும்பா தவத்திரு வீட்டினி லுய்த்தருள் செய்யணிமு
திரும்பா தவத்திரு ளார்சோலை சுற்றுஞ் சிரவையிற்க
திரும்பா தவத்திரு வானே மலையிற் றிருநடம
திரும்பா தவத்திரு மான்மரு காமெய்த் திவாகரனே

திரும்பாத—மீட்சியில்லாத
அ-அந்த
திரு-மனத்தைக்கவரத்தக்க
வீட்டினில்-முத்தியில்
ஐய்த்து-செலுத்தி
அருள்செய்-அநுக்கிரகம்புரி
அணி-அலங்காரம்
முதிரும்—அதிகமுற்ற
பாதவத்து-மரங்களடர்ந்து
இருளார்—இருள்நிறைந்த
சோலை-பூஞ்சோலைகள்
சுற்றும்-சூழ்ந்துள்ள
சிரவையில்-சிரவணபுரத்தில்
கதிர்—பிரகாசியாநின்ற
உம்பா-தேவதேவனே
தவ-தவத்திலுதித்தருளும்
திருவானே-பாக்கியவானே
மலையில்-குன்றினங்களில்
திருநடம்-திருநடனம்புரிவதால்
அதிரும்-ஒலிக்கின்ற
பாத-திருவடியுடையானே
அம்-அழகிய
திருமால்-நாராயணமூர்த்தியின்
மருகா-மருமகனே
மெய்-உண்மையான
திவாகரனே-ஞானசூரியனே

60

**திவாகர சம்புகு ணுங்காரு டனசை தீர்த்தெனுட்ப**
**திவாகர சம்புகு கையுடை யார்மெய்ச் சிரவணவூர்த்**
**திவாகர சம்புகு மாராகௌ மாரர்தஞ் சிந்தையில்வ**
**திவாகர சம்புகு மேனியெந் தாய்குறிஞ் சிக்கிறையே**

| | |
|---|---|
| திவாகர-காக்கையும் | சிரவணவூர்-சிரவணபுரத்துள்ள |
| கம்பு-நரியும் | திவாகர்-சூரியனே |
| குணுங்கு-பேயும் | சம்புகுமாரா-சிவபுத்திரனே |
| ஆருடல்-தின்னுமுடம்பினது | கௌமாரர்தம்-கௌமாரர்களது |
| நசைதீர்த்து-அபிமானமொழித்து | சிந்தையில்-இதயத்தில் |
| என்னுள்-அடியேனுளத்தில் | பதிவாக-தங்கும்படியாக |
| பதிவாகு-அமையும் | ரசம்-சாறுபோன்றசுவை |
| அரசு-தலைவனே | புகு-பொருந்தியுள்ள |
| அம்பு-பாணங்களை | மேனி-திருவுருவம்பெற்ற |
| உகு-சிந்துகின்ற | எந்தாய்-எமதுதந்தையே |
| கையுடையாய்-கரமுடையவனே | குறிஞ்சிக்கு-மலைநிலத்துக்கு |
| மெய்-உண்மையான | இறையே-முதல்வனே |

61

**சிக்கத் தினந்தின மிக்கலுத் தேமெய் தியங்குபுசிச்**
**சிக்கத் தினந்தின கேசவத் தீர்த்தருள் செய்சிலம்பார்**
**சிக்கத் தினந்தின டத்திருத் தாள்தண் சிரவையிடை**
**சிக்கத் தினந்தின மன்ருடி யேதுதித திட்டனமே**

| | |
|---|---|
| சிக்கு-பிசலான | ஆர்-பொருந்திய |
| அத்தில்-அதனில் | கிக்கத்து-முடிகளுடைய |
| நந்தினம்-கெடுதலுற்றே | இனம்-கூட்டத்தில் |
| மிக்கு-அதிகமாக | தில்-விருப்பமுற்ற |
| அலுத்தேம்-சலிப்புற்றனம் | நட-திருநடனம்புரியும் |
| மெய்-சரீரம் | திருத்தாள்-அழகிய பாதங்களை |
| தியங்குபு-தளர்ச்சியடைந்து | தண்-குளிர்ச்சிமிகுந்த |
| சிச்சி-சிச்சியெனவெறுத்து | சிரவையிடை-சிரவணபுரத்தில் |
| கத்தினம்-கூச்சலிட்டோம் | சிக்க-கிடைக்கும்படி |
| தினகேசவம்-இருளை | தினந்தினம்-நாடோறும் |
| தீர்த்து-போக்கி | மன்ருடி-மிகவிரும்பியே |
| அருள்-திருவருட்சிறப்பை | துதிதிட்டனம்-தோத்திரஞ்செய்தோம் |
| செய்-புரிவாயாக | |
| சிலம்பு-மலைகளிடத்து | ஏ-அசை |

62

திட்டத் தனைக்கும் பதியாகி மாதவச் சீர்க்கிசையாத்
திட்டத் தனைக்கும்ப லார்கவு மாரர் சிரவையில்வைத்
திட்டத் தனைக்கும் பனைப்போற் புரிகுறச் சேரிகொள
திட்டத் தனைக்கும்ப லம்பையொல் கச்செய்த திண்ணியனே

திட்டு-நிந்தைமொழிகள்
அத்தனைக்கும்—எல்லாவற்றிற்கும்
பதியாகி—இருப்பிடமாகி
மாதவ-பெருந்தவமாகிய
சீர்க்கு-சிறப்புக்கு
இசையா-பொருந்தாத
திட்டத்தனை-நிலைபரமுற்றேனை
கும்பலார்—கூட்டமுற்ற
கவுமாரர்-கௌமாரத் தொண்டரது
சிரவையில்-சிரவணபுரத்தில்
வைத்திட்டு-அமையப்புரிந்து
அத்தனை-பரமசிவனையும்
கும்பனை—கலசமுனியையும்
போல்-ஒப்பாகும்படி
புரி—செய்தருள்
குறச்சேரி—வேடர் சிற்றூரில்
கொள்-குடிகொண்ட
அதிட்டத்து-நல்வினைப்பயனுள்ள
அனைக்கு-வள்ளியம்மைக்கு
உம்பலம்பை-தெய்வயானையம்மை
ஒல்க—நாணமடைய
செய்—புரிந்தருளிய
திண்ணியனே-வலிமையுடையோனே

63

திண்ணந் தவத்தரும் பங்காத லேனைச் சிரவையிடை
திண்ணந் தவத்தரும் புத்துணர் வீந்து சிறப்பமைத்துத்
திண்ணந் தவத்தரும் பர்க்கிசை மெய்யிசை செய்யுமும்மர்
திண்ணந் தவந்தரும் பற்றீக் கும்பற் சிவன்சேய்குருவே

திண்-மனவுறுதியை
நந்து—கெடச்செய்யும்
அவத்து-வீண்செய்கைகளில்
அரும்பும்—வளர்கின்ற
காதலேனை-இச்சையுள்ளாண்ணை
சிரவையிடை-சிரவணபுரத்தில்
திண்ணம்-சத்தியமாகும்
தவத்து-தவத்தாலுதிக்கத்தக்க
அரும்—அருமைமிக்க
புத்துணர்வு-புதியஞானத்தை
ஈந்து-கொடுத்து
சிறப்பு-மேன்மையை
அமைத்து-பதியச்செய்து
திண்-கனமிருந்த
அம்—அழகிய
தவத்தர்-பெருந்தவச்செல்வர்க்கு
உம்பர்க்கு—தேவர்கட்கு
இசை-பொருந்துவதாகிய
மெய்-சத்தியமயமான
இசை-கீர்த்தியை
செய்யும்—புரியும்
மும்மதில்—திரிபுரங்கள்
நந்து--பெருகும்படிதிரியும்
அவத்தர்-ஆபத்துடையோர்கள்
உம்பல்-எழுச்சியை
தீக்கும்-சாம்பராகப்புரியும்
பல்—தந்தங்களையுடைய
சிவன்-சிவபெருமானது
சேய்-குமாரனும்
குருவே—குருவுமான தலைவன்

64

சேயா குமர குருவே யெனத்துதி செய்கிலரைச்
சேயா குமர ணமதிளுய்ப் பாய்தோத் திரிப்பவரைச்
சேயா குமர செனப்புரி வாய்மெய்ச் சிரவையிசை
சேயா குமர கதப்பரி யோன்றுணைச் சேவகனே

சேயா—சேயே
குமரகுருவே-குமரகுருபரனே
என-என்பதாக
துதிசெய்கிலரை-துதிபுரியாத வரை
சேயா-தூரமான
கும்-இருணிறைந்த
அரணமதில்—காவலில்
உய்ப்பாய்-செலுத்துவாய்
தோத்திரிப்பவரை-வாழ்த்துபவர் களை
சேய்—குமாரன்
ஆகும்-ஆதலான
அரசு—முதல்வன்
என-என்பதாக
புரிவாய்-செய்தருள்வாய்
மெய்-உண்மையமைந்த
சிரவை-சிரவணபுரத்தில்
இசை-பொருந்திய
சேய்—பிள்ளையாராகும்
ஆகு-மூடிகமான
மரகத-பச்சைநிறமுள்ள
பரியோன்-வாகனமுள்ளவருமான விநாயகரது
துணை-சகோதரனுகிய
சேவகனே-வீரனே

65

சேவகத் தன்மை யணிவிழி யம்பிகை செல்வநிரைச்
சேவகத் தன்மை யணியிப மார்குறிஞ் சிக்கிறையாஞ்
சேவகத் தன்மை யணியிசை யால்சிர வைப்பதியாய்
சேவகத் தன்மை யணிவா டிடுமெனைத் தேற்றுதியே

சேவகத்தன்-இடபவாகனமுள்ள பரமசிவன்
மையணி—மையணிந்த
விழி-கண்களைக்கொண்ட
அம்பிகை—உமாதேவியின்
செல்வ-குமாரனே
நிரை-வரிசையுற்ற
சேவகத்து-துயிலிடமாகிய
அல்-இருண்சோலையில்
மை-கரிய
அணி-கூட்டங்கூட்டமாகிய
இபமார்-யானைகளமைந்த
குறிஞ்சி-மலைநிலங்கட்கு
இறையாம்—தலைவனுகிய
சேவகத்தன்மை—வீரக்குணத்தை
அணி-அலங்காரமுறப்புனைந்த
இசைகால்-கீர்த்திமிகுந்த
சிரவை-சிரவணபுரமாகிய
பதியாய்-நகரத்தையுடையோனே
சேவகத்து—பணித்தொண்டுக்கு
அன்மை-அல்லாதநிலைமை
அணி-பொருந்தி
வாடிடு-தளர்வடையும்
எனை-அடியேனை
தேற்றுதி-கடைத்தேறப்புரிந்தருள்

66

**தேற்றத் தவத்து நெறியறி யாவெனைச் சித்திபெற்ற**
**தேற்றத் தவத்து நிலையுணர் வாருட் சிறந்தமையத்**
**தேற்றத் தவத்து விதவானந் தாமெய்ச் சிரவையிசை**
**தேற்றத் தவத்துவ சுத்திசெய் காரணச் சிற்பரனே**

தேற்ற—துணிவமைந்து
தவத்து—மாதவம்புரியும்
நெறியறியா—வழியுணராத
எனை-அடியேனை
சித்தி-அட்டசித்திகளை
பெற்ற-அடைந்துள்ள
தேற்றத்த—நிச்சயமமைந்த
வத்து-செம்பொருளினது
நிலை-நிலைமையை
உணர்வார்—அநுபூதியாலறிந்த வர்களது
உள்—கூட்டத்தில்
சிறந்து—மேன்மைபெற்று
அமைய-இசையும்படி
தேற்று-தெளியவைக்கும்
அத்த-முதல்வனே
அத்துவித-இரண்டல்லாத
ஆனந்தா-இன்பாநுபவனே
மெய்—சத்தியமான
சிரவை—சிரவணபுரத்தில்
இசை—பொருந்தியுள்ள
தேற்று-தேற்ருன்விதைபோன்ற
அத்த-முத்திரைக்கையனே
அத்துவ—அத்துவாக்களை
அத்திசெய்-பரிசுத்தம்புரியும்
காரண-மூலமான
சிற்பரனே-ஞானமுதல்வனே

67

**சிற்ருவி யங்க மிசையோ வறப்பல் சிலுகுறநஞ்**
**சிற்ருவி யங்க மிசைநாட் டுமைம்புலந் தீர்தரநெஞ்**
**சிற்ருவி யங்க மிசைநாதங் காட்டிச் சிரவையுளார்**
**சிற்ருவி யங்க மிசைதாட் கனந்தமெய்த் தெண்டமின்றே**

சிற்ருவி—சிறியஉயிரானது
அங்கமிசை—சரீரத்தின்பால்
ஓவற-நீங்குதலின்றிய
பல்-அநேகவிதமான
சிலுகுற-துன்பமடையும்படி
நஞ்சில்-விடத்தைப்போல
தா-எட்டி
இயங்கு—சஞ்சரிக்கின்ற
அமிசை-செல்வாக்கை
நாட்டும்-நிலைசெய்யும்
ஐம்புலம்—பஞ்சேந்திரியங்கள்
தீர்தர-நீங்கும்படி
நெஞ்சில்-உள்ளத்தில்
தாவி—பாய்ந்து
அம்-அழகிய
கம்-சிரசின்கண்
இசை—கீதமயமான
நாதம்-தொனியை
காட்டி-காணப்புரிந்து
சிரவையுள்-சிரவணபுரத்துள்
ஆர்-நிறைவமைந்த
சிற்ரு-ஞானமாகிய
வியம்-விசாரித்த
கம்-பரமாகாசத்தை
இசை-பொருத்தியருள்
தாட்கு—திருவடிகட்கு
அனந்தம்—எண்ணில்லாத
மெய்-உண்மையான
தெண்டம்-வணக்கம்
இன்று—இக்காலத்தில்
ஏ-அசை

68

தெண்டங்கை யேற்ற ரருள்பா லகநற் சிரவையிடை
தெண்டங்கை யேற்ற முதல்வா வகத்தாந் தெளிவறியேன்
தெண்டங்கை யேற்ற முடையே னெனினுந் திருவுளத்தென்
தெண்டங்கை யேற்றவ சாற்றடி யார்தந் திரள்செறியே

| | |
|---|---|
| தெண்-தெளிவு | தெண்டம்—அபராதமான |
| தங்கு-பதிந்த | கை-சிறுமையின் |
| ஐ—அழகிய | ஏற்றம்-மிகுதியை |
| ஏற்றர்-இடபவாகனத்தையுடைய பரமசிவன் | உடையேன்—உள்ளேன் |
| அருள்-ஈந்த | எனினும்-என்றாலும் |
| பாலக-குமாரனே | திருவுளத்து—திருவுள்ளத்தில் |
| நல்—நல்ல | என்—அடியேனது |
| சிரவையிடை—சிரவணபுரத்தில் | தெண்டம்-வணக்கத்தை |
| தெண்டு-தண்டாயுதம் | கையேல்—வெறுக்காதே |
| அங்கை-உள்ளங்கையில் | தவசு-உண்மைத்தவம் |
| ஏற்ற-கொண்ட | ஆற்று-செய்கின்ற |
| முதல்வா- தலைவனே | அடியார்தம்-மெய்யன்பரது |
| அகத்து—உள்ளத்தில் | திரள்-கூட்டத்தில் |
| ஆம்—முன்னேற்றமுறத்தக்க | செறி-நெருங்கச்செய் |
| தெளிவு-விளக்கத்தை | ஏ—அசை |
| அறியேன்-உணரமாட்டேன் | |

69

திரட்சித் தனந்தந் திகழ்த்திடக் கூடணித் தேமலவிர்
திரட்சித் தனந்தந் திடைவள்ளி கேள்வன் சிரவையிடந்
திரட்சித் தனந்தந் தியக்கற நெஞ்சந் சேர்தருமா
திரட்சித் தனந்தந்திரு விளையாடற் சிறப்பிடுமே

| | |
|---|---|
| திரட்சி-முத்துக்கள் | திரட்சி—தெருண்டமைந்த |
| தன்-தனது | சித்தன்-ஞானமூர்த்தி |
| அந்தம்-அழகை | நந்தம்-நமது |
| திகழ்த்திட-விளங்கச்செய்ய | தியக்கு—மயக்கம் |
| கூடு-சேர்ந்த | அற-நீங்கும்படி |
| அணி-அலங்காரமிகுந்த | நெஞ்சகம்-உள்ளத்தில் |
| தேமல்-சுணங்க | சேர்தரும்-கூடியுள்ள |
| அவிர்-பிரகாசிக்கும் | ஆதி-முதல்வன் |
| திரட்சி-திரண்ட | ரட்சித்து—காப்பாற்றி |
| தனம்-தனத்தையும் | அனந்தம்-எண்ணில்லாத |
| தந்து-நூல்போன்ற | திருவிளையாடல்—தெய்வீகத் தன்மையானவிளையாட்டின் |
| இடை-இடையையுமுடைய | சிறப்பு-மேன்மையை |
| வள்ளி-வள்ளிநாயகின் | இடும்-கொடுத்தருளும் |
| கேள்வன்-மணவாளன் | ஏ—அசை |
| சிரவையிடம்-சிரவணபுரத்தின் கண் | |

70

சிறப்பான வையகத் திற்றீட் டினன்றென் றிசைநடுவன்
சிறப்பான வையகத் தெய்திடச் செய்தனர் தீர்த்தருண்மெய்ச்
சிறப்பான வையகத் தோர்காணச் செய்தி சிரவையிசை
சிறப்பான வையகத் திற்றீர்ந்து நெஞ்சந் திருப்பெறவே

| | |
|---|---|
| சில்-சிலவாகிய | வையகத்தோர்-உலக |
| தப்பால்—குற்றத்தால் | மாந்தர்கள் |
| நல்—நகரவெழுத்தினது | காண-தமதுவிழிகொண்டு |
| ஐய-தலைவனுகியபிரமன் | தெரிய |
| கத்தில்-சிரசினிடத்தில் | செய்தி—புரிந்தருள்வாயாக |
| தீட்டினன்-விதித்தான் | சிரவை-சிரவணபுரத்தில் |
| தென்றிசை-தென்றிக்கிலுள்ள | இசை-பொருந்தியுள்ள |
| நடுவன்-இயமனும் | சிறு—இளமைத்தன்மை |
| சிறு—சிறிதான | நீங்காத |
| அப்பான்-அம்பையுடைய | அப்ப—தந்தையே |
| மன்மதனும் | ஆன—நன்மையாகியவற்றை |
| நவை-குற்றம் | வை-பதித்து |
| அகத்து-உள்ளத்து | அகத்தில்—அகங்காரத் |
| எய்திட-அடையுமாறு | தினின்றும் |
| செய்தனர்-செய்கின்றனர் | தீர்ந்து-நீங்கி |
| தீர்த்து-(இவைகளை) மாற்றி | நெஞ்சம்—இதயமானது |
| அருண்-திருவருண்மயமான | திரு-தெய்வீகத்தை |
| மெய்ச்சிறப்பு-உண்மைப் | பெற-அடையும்படி |
| பெருமையை | ஏ-அசை |
| ஆன—இருக்கின்ற | |

71

திருக்கத வத்திறப் பப்பிறப் பெய்தத் தியக்குதகந்
திருக்கத வத்திறப் புத்துணர் வீந்துப தேசமுறத்
திருக்கத வத்திறப் புப்புரிவாய் மெய்ச் சிரவையிற்றேய்
திருக்கத வத்திறப் புச்செய்த விச்சையத் தீரத்தனே

| | |
|---|---|
| திருக்கது-குற்றமானது | திறப்பு-திறக்கும்படி |
| அவத்து—வீணுக | புரிவாய்-செய்தருள்வாய் |
| இறப்புப்பிறப்பெய்த-சனன | மெய்-சத்தியமான |
| மாமுறும் | சிரவையில்—சிரவணபுரத்தில் |
| தியக்குது-மயக்குகின்றது | தோய்-பொருந்தியுள்ள |
| அகத்திருக்க—உள்ளக்கண் | திருக்கு—வஞ்சகங்களை |
| ணதனுல் | அத-சங்கரிக்கின்றவனே |
| தவத்திற-தவவுறிதியான | வத்து-செம்பொருளின் |
| புத்துணர்வு-புதுமைஞானத்தை | இறப்பு-மிகுதியை |
| ஈந்து-கொடுத்து | செய்து—உண்டாக்கி |
| உபதேசமுற்று-உபதேசத்திற் | அவிச்சையை-அஞ்ஞானத்தை |
| பொருந்தியுள்ள | தீர்-போக்குகின்ற |
| அ—அந்த | அத்தனே-முதல்வனே |
| திருத்தவம்-தெய்வீகக்கதவினை | |

72

திராக் கதத்துவ கைக்கொடுங் கோன்மைத் திறலமையுந்
திராக் கதத்துவ ரைத்தனி வீரச் சிலைவளைத்துத்
திராக் கதத்துவ ணன்மரு காமெய்ச் சிரவையிசை
திராக் கதத்துவ ஞானநல் காயென் செயலறவே

தீரா—நீங்காத
கதத்து-சினத்துடன்கூடிய
உவகை-சந்தோடமுற்ற
கொடுங்கோன்மை-அநீதியான
திறல்-வெற்றித்தன்மை
அமையும்-பொருந்தும்
தீ-கொடிய
ராக்குத-அரக்கர்களான
துவரை-பகையை
தனி-ஒப்பற்ற
வீர-சேவகப்பான்மையுள்ள
சிலைவளைத்து-வில்லைவளைவித்து
தீராக்கு-முடிவடையச்செய்யும்
அதத்து—சங்காரனை
உவணன்-கருடவாகனனுடைய
மருகா-மருமகனே
மெய்-உண்மையான
சிரவை-சிரவணபுரத்தில்
இசை-அமைந்துள்ள
தீர்-முடிவுத்தன்மைபெற்ற
ஆகக-செல்வமுடையோனே
தத்துவ—மெய்யான
ஞானம்-உணர்ச்சியை
நல்காய்-கொடுத்தருள்வாய்
என்—அடியேனுடைய
செயல்-கன்மங்கள்
அற-நீங்கும்படி
ஏ—அசை

73

செயலையங் கந்த மலர்வாவி சுற்றுஞ் சிரவணவூர்ச்
செயலையங் கந்த வுனையே கதியெனச் சேர்ந்தவென்னைச்
செயலையங் கந்த முறுந்தேவுண் டென்பர் திறத்திசையச்
செயலையங் கந்தணை வார்க்கூட்டிச் சேர்சிவ சின்னத்தையே

செய்-வயலும்
அலை-திரையமைந்த
அம்-சலத்துடன்கூடிய
கந்த-வாசனைமிகுந்த
மலர்வாவி-பூவமைந்த தடாகங்கள்
சுற்றும்-சூழ்ந்துள்ள
சிரவணவூர்-சிரவணபுரத்தை
செயல்-காக்கும்
ஐ-தலைவனாகிய
அம்-அழகிய
கந்த—குமரகுருபரக்கடவுளே
உனையே-உன்னையே
கதியென-ஆதாரமென்பதாக
சேர்ந்த—அடைந்துள்ள
என்னை—அடியேனை
செயலை-அசோகமரமாகிய
அங்கு—அவ்விடத்தில்
அந்தமுறும்—அழகாகிய
தேவுண்டு—தெய்வமுள்ளது
என்பர்—என்றுரைக்கும் சமணரது
திறத்து-மதநிலையில்
இசைய-இசையும்படியாக
செயல்-செய்யாதே
ஐ—அழகியகுறிகளை
அங்கம்-சரீரத்தில்
தணவார்-நீக்காதவர்பால்
கூட்டி—கூட்டுவித்து
சேர்—பொருந்தச்செய்
சிவ-மங்களமாகிய
சின்னத்தை-சாதனங்களை
ஏ-அசை

74

**சின்னத் தனத்த முறக்காட்டி யேமிகச் சீரழிக்குஞ்**
**சின்னத் தனத்தர வாநிலை வேரறத் தீர்த்தருண்மெய்ச்**
**சின்னத் தனத்த வருள்போத நல்காய் சிரவையிசை**
**சின்னத் தனத்தனை யார் புகழ்நித் திலத்துரனே**

சில்—ஆரவாரத்தை
நத்து—விரும்பச்செய்யும்
அனத்தம்-ஆபத்தை
உற-பொருந்தும்படி
காட்டி-தெரியவைத்து
மிக—அதிகமாக
சீர்—செல்வச்சிறப்புக்களை
அழிக்கும்-தொலைக்கும்
சின்ன—இளமையான
தனத்தர்—தனங்களையுடைய
மங்கையரது
அவா-ஆசையின்
நிலை-பிறப்பிடத்தின்
வேரற-மூலமறும்படி
தீர்த்து—ஒழித்து
அருண்—திருவருளின்
மெய்—சத்தியமயமான
சின்-ஞானத்தையுடைய
அத்தன்-சிவபெருமான்
நத்த-விரும்ப
அருள்—அநுக்கிரகித்த
போதம்—உபதேசத்தை
நல்காய்-கொடுத்தருள்வாய்
சிரவை-சிரவணபுரத்தில்
இசை-ஒலிக்கின்ற
சின்னத்து-சின்னங்களில்
அனத்தன்-பிரமதேவனை
அனையார்-ஒப்பவர்கள்
புகழ்—தோத்திரஞ்செய்கின்ற
நித்திலத்து-முத்துமாலையணிந்த
உரனே—மார்புடையோனே 75

**திலத்தமை யுந்தயி லம்புரைந் தெங்குஞ் செறிந்தவிர்செந்**
**திலத்தமை யுந்தயி லம்பொலி வெய்தமத் திகழ்செந்**
**திலத்தமை யுந்தயி லம்பக நெற்றிச் சிரவையவெந்**
**திலத்தமை யுந்தயி லம்படை யாவினை சிந்துதியே**

திலத்தமையும்-எள்ளிலமைந்த
தயிலம்புரைந்து-நெய்போல
எங்கும்-எவ்விடத்தும்
செறிந்து-நெருங்கி
அவிர்—பிரகாசித்து
செந்தில்-உயிர்களில்
அத்து-இசைந்து
அமை-அம்மையிடத்தும்
உந்தை-உனதுதந்தையின்
இல்-இடத்தும்
அம்—அழகினது
பொலிவு-மிகுதியானது
எய்த-அடையும்படியாக
மத்தி-இடையில்சோமாய்
கந்தமாக
திகழ்—விளங்குகின்ற
செந்தில்-திருச்செந்தூரிலுள்ள
அத்தம்-செம்பொருளானவனே
மயில்—மயில்வாகனத்தை
உந்து-செலுத்துகின்ற
ஐ-அழகையுடைய
இலம்பக-மாலையணிந்த
நெற்றி-நுதலையுடைய
சிரவைய-சிரவணபுரத்துள்ள
வனே
எம்-எமது
தில்-விருப்பத்தமைந்த
அத்த-முதல்வனே
மையில்-ஆட்டுவாகனத்தில்
உந்து-ஏறுகின்ற
அயில்-வேலான
அம்—அழகிய
படையா-ஆயுதத்தையுடை
யானே
வினை-கன்மங்களை
இந்துதி-அழித்தருள்வாயாக
ஏ-அசை 76

சிந்துர வத்திர வள்ளிம னோகர தெய்வமுதற்
சிந்துர வத்திர ஞர் துணைச் சோதர சீர்த்திமிகுஞ்
சிந்துர வத்திர மார்செந்தி னேர்சிர வையவினை
சிந்துர வத்திர சத்திர மேந்திய செங்கரனே

சிந்துர-சிவப்பாகிய
வத்திர-ஆடையணிந்த
வள்ளி-வள்ளிநாயகியின்
மனோகர-சந்தோடமுடையவனே
தெய்வ-தேவர்கட்கு
முதல்-தலைபெற்ற
சிந்துரவத்திஞர்-யானைமுகமுடையவிநாயகரது
துணை-சகாயமாகிய
சோதர-சகோதரனே
சீர்த்திமிகும்-சிறப்புமிகுந்த
சிந்து-சமுத்திரத்தின்
ரவத்திரம்-ஓசைநிலை
ஆர்-நிறைவுபெற்றுள்ள
செந்தில்-திருச்செந்தூரரை
நேர்-பொருந்தியுள்ள
சிரவைய-சிரவணபுரத்தலத்தனே
வினை-தீவினைகளை
சிந்து-கெடுத்தருளும்
உர-ஞானசொரூபனே
அத்திரம்-விடுபடையும்
சத்திரம்-விடாப்படையும்
ஏந்திய-தரித்துள்ள
செம்-சிவந்துவிளங்கும்
கரனே-கைகளையுடையானே

77

செம்மைக் கதிருவ ராந்தேவர் தேர்திருக் காட்சிதருஞ்
செம்மைக் கதிருவ மைக்கறு மிக்கருந் தேசமைந்து
செம்மைக் கதிருவ கையரின் மத்திச் சிரவையனே
செம்மைக் கதிருவ மீந்தருண் மீந்தருட் டேம்புகவே

செம்-(யாகத்தில்)உதித்த
மைக்கு-ஆட்டுக்கு
அதிருவராம்-உளநடுங்கினரான
தேவர்தேர்-தேவர்கள்காண
திரு-தெய்வீகத்தன்மையுற்ற
காட்சிதரும்-தரிசனந்தந்தருளிய
செம்மை-செவ்வையான
கதிர்-இளஞ்சூரியன்
உவமைக்கு-உவமானமோதற்கு
அறும்-சமானமாகாத
மிக்கு-மேலான
அரும்-அருமைபெற்ற
தேசமைந்து-பிரகாசம்பொருந்தி
செம்-சிவப்பும்
மை-நீலமும்படைத்த
கதிர்-பிரகாசமிகுந்து திருமேனி கொண்ட
உவகையரின்-சந்தோடத்தினரது
மத்தி-நடுவிலமைந்த
சிரவைய-சிரவணபுரத்தலைவனே
செம்மு-மூடியமையும்பராபரத்துள்
ஐக்க-ஒடுங்குதலான
திருவம்-செல்வத்தை
ஈந்தருள்-கொடுத்தருள்வாயாக
மீந்து-மிகுதியான
அருள்-திருவருண்மயமாகிய
தேம்-இன்பம்
புக-நுழையும்படி

78

தேம்பா வனையந் தகாரத்தின் மீட்டுத் திருவருட்சீர்த்
தேம்பா வனையந் தமிற்ருேரொன் ருனதன் சீர்த்திகளைத்
தேம்பா வனையந்த நற்ருெண் டளித்தான் சிரவை கொண்டோம்
தேம்பா வனையந் தகாநட வாய்வந்த தென்றிசைக்கே

தேம்-தேசங்களிலலைந்த
பாவனை-தீவினையுடையேனை
அந்தகாரம்—இருண்டஅகங்காரத்தினின்றும்
மீட்டு-திருப்பி
திரு-தெய்வீகத்தன்மையுள்ள
அருட்சீர்—கருணைச்சிறப்பால்
தேம்-இனிமை
பாவு-பரவிய
அனை-தாய்மார்கள்
அந்தமற்ருேர்-அளவில்லாதவர்
ஒன்ருன-ஒன்றுபட்டதுபோன்ற தன்மையுற்ற
தன்-தனது
சீர்த்திகளை-மகிமைகளை
தேம்-தித்திப்பமைந்த
பா-பாடல்களாக
வனை—திரட்டிப்போற்றுதலான
அந்த-அந்த
நல்—நன்மைவாய்ந்த
தொண்டு-குற்றேவலை
அளித்தான்-கொடுத்தருளினனுடைய
சிரவை—சிரவணபுரத்தை
கொண்டோம்-உள்ளும்புறத்தும்கண்டுவசித்துள்ளோம்
தேம்பா-வாட்டமுறத்தக்க
வல்-வலிமையால்
நை-மெலியச்செய்யும்
அந்தகா-இயமனே
நடவாய்-செல்லக்கடவாய்
வந்த—நீயிருந்துவந்த
தென்றிசைக்கே—உனதூருக்கே

79

தென்றிக் கடாவந்த காவுனக் கென்றுசெப் பேடுளது
தென்றிக் கடாவந்த காமா சிரவையற் சேருநர்தோய்
தென்றிக் கடாவந்த நாளாஞ் செயன்மறந் திட்டனிரோ
தென்றிக் கடாவந்த னம்புரிந் தேத்துநஞ் சேமவைப்பே

தென்-தெற்கு
திக்கடா-திசையிலுள்ளநரகபூமியடா
அந்தகா-இயமனே
உனக்கு-உனக்கு
என்று-உரித்தானதென்று
செப்பேடு-சொல்லும்ஏடுசெப்புப்பட்டயம்
உளது-இருக்கின்றது
தென்றி-தென்றற்காற்றை
கடாவு-செலுத்திவரும்
அந்த-அழகிய
காமா-மன்மதனே
சிரவையன்—சிரவணபுரத்துள்ளகுமரகுருபரனே
சேருநர்-அடைக்கலமுற்றவர்
தோய்-பொருந்தத்தக்க
தென்-அழகிய
திக்கு—ஆதாரமானகயிலாயம்
அடா-உமக்குஅடுக்காதாகும்
அந்தநாள்-முன்காலத்தில்
ஆம்செயல்-அடைந்ததண்டனையை
மறந்திட்டனிரோ—மறந்துவிட்டீரோ
தென்-தமிழ்பேசவறியாது
திக்கு-வாய்தடைபட்டுள்ளீர்
அடா-அதிசயம்
வந்தனம்—வணக்கஞ்செய்து
ஏத்தும்-எம்மையொத்துத்துதித்துவணங்குவீராயின்
நம்-நம்முடைய
சேமவைப்பு-புதையலாகும்

80

**சேமப் படைக்கலம் போலிடை யிடறச் சிந்தைதந்து**
**சேமப் படைக்கலம் புக்தியுற் றேமெது சேரினுமஞ்**
**சேமப் படைக்கலம் புண்ணியர் போற்றுஞ் சிரவணநெஞ்**
**சேமப் படைக்கலம் பற்பவுத் தூளனச் செல்வமதே**

சேம-மிகுத்துவைத்துள்ள
படைக்கலம்-மூலப்படைகளை
போல்-போன்றதாக
இடையீடு-இடைவிடுதல்
அற-நீங்கும்படி
சிந்தைதந்து-உள்ளத்தைக் கொடுத்து
சேம-இன்பத்தை
படு—உண்டாக்கும்
ஐக்கு—தலைவனுக்கு
அலம்புத்தி—போதியபுத்தியை
உற்றேம்-பொருந்தினேம்
எதுசேரினும்-யாதுவந்தாலும்
அஞ்சேம்-பயப்படமாட்டோம்
மப்பு-மயக்கத்தை
அடைக்கலம்—நுழையவிட மாட்டோம்
புண்ணியர்—பரிசுத்தமுள்ளவர்
போற்றும்-வணங்குகின்ற
சிரவண-சிரவணபுரமமைந்த
நெஞ்சேம்-உள்ளமுடையோம்
அப்பு-பூசியுள்ள
அடைக்கலம்—புகலிடமும்
பற்ப-நீருகிய
உத்தூளன-தூளி
செல்வமது-பாக்கியமுமாம்
ஏ-அசை

81

**செல்லந் தரித்திர மைந்தா விளையவள் சேட்டைதருஞ்**
**செல்லந் தரித்திர மென்றுமிரண்டுஞ் சிறந்தபங்காய்ச்**
**செல்லந் தரித்திர சந்தீர் மரமணிச் சீர்செயலாற்**
**செல்லந் தரித்திர மாற்றய் சிரவணத் தேசிகனே**

செல்-மேகம்போன்ற
சுந்தரி—பார்வதிதேவியின்

திர-முத்திவித்தாயுள்ள
மைந்தா-குமாரனே
இளையவள்-இலக்குமியும்
சேட்டை—மூத்தவளான மூதேவியும்
தரும்-கொடுக்கின்றதான
செல்லம்-செல்வமும்
தரித்திரம்—வறுமையுடன்
என்னும்-என்றுசொல்லும்
இரண்டும்-இருவகைகளும்
சிறந்த-மேலான
பங்காய்-பாகுபாடுள்ளவானவாய்
செல்-கறையானும்
அந்து-அந்துப்பூச்சியும்
அரித்து—முறையேகவர்ந்து
இரசம்—உட்பொருளை
தீர்-போக்கடித்த
மரம்-மரத்தையும்
மணி-தானியத்தையும்செய்யும்
சீர்-நன்மையைச்
செயலால்—புரிதலால்
செல்லம்—உலகவாழ்விற்புக மாட்டோம்
தரித்து-தங்கி
இரம்—இருக்கமாட்டோம் ஆதலால்
மாற்றய்-இதைவிட்டுமாற்றி யருள்வாய்
சிரவண-சிரவணபுரத்துள்ள
தேசிகனே-குமரகுருபரனே

82

சிகரா சலத்துணை நாடகத் தாள சிரவையில்வா
சிகரா சலத்துணை யாலிசை யுங்குறச் சேயிழைவ
சிகரா சலத்துணை வேணைக்கை தூக்கித் திருத்துதிவி
சிகரா சலத்துணை யானைக் கிரங்குநன் செம்மருகே

சிகர-கொடுமுடிகளுள்ள
அசல-மலைகளிற்புரியும்
நாடக-நடனத்தைக்கொண்ட
துணை-இரண்டாகிய
தாள-திருவடிகளையுடையவனே
சிரவையில்-சிரவணபுரத்தில்
வாசி-எழுந்தருளியுள்ளவனே
கராசல-யானைவடிவமுள்ள
துணை-விநாயகரால்
இசையும்-சம்மதமுற்ற
குறச்சேயிழை-வள்ளியம்மைக்கு
வசிகரா-சுயாதீனமுற்றவனே
சலத்துள்-சஞ்சலத்தினிடை
நைவேனை-தளர்கின்றஎன்னை
கைதூக்கி-கைப்பற்றி
திருத்துதி-நேர்படுத்தியருள்
விசி-கட்டுப்படுத்திய
கரா-முதலையினால்
சலத்து-தடாகத்தின்பால்
உணை-மெலிவடைந்த
யானைக்கு-கசேந்திரனுக்கு
இரங்குநன்-வரமளித்தருளிய
திருமாலுக்கு
செம்-சிறந்த
மருகே-மருமகனே

83

செம்மலை யாமக ரந்தத்தின் மாற்றிடுஞ் சேண்பொலிகாச்
செம்மலை யாமக ரந்தனைப் போற்பற்று தேசிகமெய்ச்
செம்மலை யாமக ரந்தமெய்கண்டு சிரவையின்பாற்
செம்மலை யாமக ரந்தனைப் போல்பவஞ் செற்றனமே

செம்மலை-பழம்பூவினை
ஆம்-பெருகிவழியும்
மகரந்தம்-தேனருவியால்
மாற்றிடும்-நீக்குகின்ற
சேண்பொலி-ஆகாயமளாவிய
கா-சோலைசூழ்ந்த
செம்-சிவந்த
மலை-மலைக்கூட்டங்கள்
ஆம்-அக்கரங்கள்தாமுதித்தற்
காதாரமான
அகரந்தனை-அகரவுயிரினை
போல்-ஒக்கும்படி
பற்றும்-பற்றுந்தலைவனாகிய
தேசிக-ஞானதேசிகனே
மெய்-சத்தியமான
செம்மல்-பெருமையிற்சிறந்த
ஐ-தலைவன்
யாம்-யாங்கள்
மகர்-கௌமாரரென்னும்
அந்த-அத்தகைய
மெய்-நிச்சயத்தை
கண்டு-அநுபூதியாலறிந்து
சிரவையின்பால்-சிரவண
புரத்தில்போற்றியதால்
செம்மு-முடியுள்ள
அலையாம்-திரையானசலத்
துள்ளமையும்
மகரந்தனை-சுறுமீனை
போல்-ஒத்தமைந்த
பவம்-பிறவியாகியதுற்
குணங்களை
செற்றனம்-கொன்றோம்
ஏ-அசை

84

செற்றத்தை மாற்ற மதித்தன்பில் யானங்கு செல்லவிடுஞ்
செற்றத்தை மாற்ற மதுபிச காயினுஞ் சிந்தைநம்போற்
செற்றத்தை மாற்றழை கின்றில கொல்லோ சிரவையுளார்
செற்றத்தை மாற்றல ரேகொலிங் குண்மை தெரிந்திலனே

செற்றத்தை-தலைவன்சினத்தை
மாற்ற-நீக்கும்படி
மதித்து-நினைத்து
அன்பில்—காதலால்
யான்-அடியேன்
அங்கு-அவரிடம்
செல்லவிடும்-போய்வரச் செலுத்தும்
செல்-மேகமும்
தத்தை-கிளியும்சொல்லும்
மாற்றமது-வார்த்தைகளானவை
பிசகாயினும்—குற்றமானாலும்
சிந்தை—இதயத்தில்
நம்போல்-நம்மைப்போல
செற்று-நெருங்கி
அத்தை-தலைவியினது
மால்-காதல்
தழைகின்றிலகொல்லோ-அவர் மனத்தில்நம்மீதுண்டான தில்லையோ
சிரவை-சிரவணபுரத்து
உள்ளார்—இருக்கின்றவர்
செற்ற-சலஞ்சாதித்தலாகிய
தை-பின்னலுற்ற
மாற்றலரேகொல்-பகைத் தன்மையுற்றவரோ
இங்கு-இவ்விடத்தில்
உண்மை-சத்தியத்தை
தெரிந்திலன்—அறிந்தேனில்லை
ஏ—அசை

85

தெரியலை யேற்ற மிகுங்கடல் போன்று தெழிப்பமைந்த
தெரியலை யேற்ற வரையறி யேனவர் திண்புயந்தோய்
தெரியலை யேற்ற வெனக்கரு ளார்சிர வையருளந்
தெரியலை யேற்ற வரைத்தண வாதென்றன் சித்தமதே

தெரி—கொழிக்கின்ற
அலையேற்றம்—திரையெழுச்சி
மிகும்—அதிகரித்த
கடல்போன்று—சமுத்திரம்போல
தெழிப்பமைந்த—பேரொலி வாய்ந்த
தெரு—வீதியினது
இயலை—இயற்கையையும்
ஏற்றவரை—பொருந்தின வரையும்
அறியேன்-உணர்ந்தேனில்லை
அவர்—தலைவரது
திண்-வலிமையமைந்த
புயந்தோய்-மார்பிற் பொருந்தியுள்ள
தெரியலை-கடப்பமாலையை
ஏற்ற—இரந்த
எனக்கு—அடியேனுக்கு
அருளார்—கொடுக்கின்றாரில்லை
சிரவையர்-சிரவணபுரத்தமர்ந்த (தலைவரது)
உளம்—திருவுள்ளக்கருத்து
தெரியலை-யாதென்றுகாண முடியவில்லை
ஏற்று-தன்னைப்புகுவித்த
அவரை-தலைவரை
தணவாது—நீக்காது
என்றன்-அடியேனுடை
சித்தமது-இதயமானது
ஏ-அசை

86

சித்தத் தரங்கத் திகைப்பொழி யார்சிறு நூற்றுறைமெச்
சித்தத் தரங்கத் திசைப்பார் மதவெறி தீர்த்தருட்காட்
சித்தத் தரங்கத் திளைப்பரிற் றோய்த்தி சிரவையிலாஞ்
சித்தத் தரங்கத் திருமான் மருக சிலம்பரசே

சித்த-இதயத்திலுள்ள
தரங்க-அசைவமைந்த
திகைப்பு-மயக்கத்தை
ஒழியார்-நீக்கமாட்டார்கள்
சிறுநூல்-பசுநூல்களின்
துறைமெச்சி-நிலைகளைப் புகழ்ந்து
தத்தரம்-தமதுமேன்மைகளை
கத்திசைப்பார்-கதறுமவர்களது
மதவெறி-பிடிவாதப்பித்தத்தை
தீர்த்து-சேராமலொழித்து
அருட்காட்சி—அருளநுபவங் கண்டு
தத்தர்-தம்மைக்கொடுத்தவர்
அங்க—சரீரத்தில்
திளைப்பரில்-அழுந்தியசுயாநு பவத்தர்கூட்டத்தில்
தோய்த்தி-கலக்கும்படிசெய்
சிரவையில்—சிரவணபுரத்தில்
ஆம்-ஆகிஅடியவரைக் காத்தருள்
சித்தத்த-பிரயத்தினமாயுள்ள
ரங்க-சீரங்கத்தமைந்த
திருமால்-நாராயணமூர்த்தியின்
மருக-மருமகனே
சிலம்பரசே—குறிஞ்சிக்கிழவனே

87

சிலம்பினந் தங்க விளங்களை யார்நடுத் தென்றலிற்றோய்
சிலம்பினந் தங்க விறன்மதற் றீத்த திருக்கருட்சேய்
சிலம்பினந் தங்க விருப்பான் சிரவைத் துதியெனவே
சிலம்பினந் தங்கவி யேற்றின் பமேற்படத் தேக்கிடுமே

சிலம்பின்-காற்சிலம்பினது
அந்தம்-அழகானது
கவின்-தக்கபண்பிலிசைந்த
அங்கனையர்-மங்கையர்களது
நடு—மத்தியில்
தென்றலில்-தென்றற்றேரில்
தோய்—பொருந்திய
சில்-அற்பமான
அம்பின்-அம்புகளைக்கொண்டு
நந்து—பெருக்கமுற்ற
அங்க-சரீரம்பெற்ற
விறல்-வெற்றிமிகுந்த
மதன்-மன்மதனை
தீத்த-எரித்தருளிய
திருக்கு—நெற்றிக்கண்ணி லுதித்த
அருள்—திருவருண்மயமான
சேய்-குமாரக்கடவுள்
சிலம்பினம்-மலைக்கூட்டங்களில்
தங்க-நிலைத்துவிளையாடல் செய்யும்
விருப்பான்-ஆசையுடையவன்
சிரவை-சிரவணத்தில்
துதியெனவே-தோத்திரமென் றும்படி
சிலம்பு-ஒலித்துள்ள
இன்-இனிய
நந்தம்—எம்முடைய
கவி-பாடல்களை
ஏற்று-செவிகொண்டு
இன்பம்-பேரின்பாநுபவம்
மேற்பட—அதிகமுறும்படி
தேக்கிடும்-நிறைவிப்பான்
ஏ—அசை

88

தேக்கத் திருத்துவ மாதிய நானெனச் செப்பியருத்
தேக்கத் திருத்துவ னுயேற்குப் பத்திச் சிறப்பமைத்துத்
தேக்கத் திருத்துவ துன்பர மேயாஞ் சிரவையிசைத்
தேக்கத் திருத்துவசஞ் சாலும் வெற்றியஞ் சேவலனே

தே—தேசத்தில்
கத்திருத்துவம்-கர்த்தாவாதிய
நானென-நானேயென்று
செப்பி-சொல்லி
அரு-நீங்காத
தேக்கத்து-தியக்கத்தை
இருத்துவன்-தங்கவைப்பேன் ஆகிய
நாயேற்கு—அடியேனுக்கு
பத்தி-அன்பினது
சிறப்பு-மிகுதியை
அமைத்து-பதியவைத்து
தேக்க-நிறைவுபொருந்த
திருத்துவது-சீர்திருத்தல்
உன்-உனது
பரமேயாம்—பொறுப்பேயாகும்
சிரவை-சிரவணபுரத்தமைந்த
இசை-கீர்த்தியாகிய
தேக்க-நிலையுடையோனே
திரு-தெய்வீகமுற்ற
துவசம்-கொடியாகிய
சாலும்-பொருத்தமான
வெற்றி—சயத்தன்மையுள்ள
அம்-அழகிய
சேவலனே—குக்குடத்தனே 89

சேவலங் கைக்கொடி யாகனே கினத் திசைமுகத்தோன்
சேவலங் கைக்கொடி யாற்செகுத் தான்றுத் தியம்புரியுஞ்
சேவலங் கைக்கொடி யானே வளமைச் சிரவையரா
சேவலங் கைக்கொடி யாவின்ப ஞானநிட் சேபநல்கே

சே-சிவப்புநிறத்தை
வலம்—வலதுபாகமாகிய
கை—இடத்தில்
கொள்-கொண்ட
தியாகன்-சிவபெருமானும்
எகின—அன்னவாகனமுள்ள
திசைமுகத்தோன்-பிரமதே வனும்
சேவ—பாம்புபோன்று
லங்கை- இலங்காபுரியிலுள்ள
கொடியான்—தீயவனாகிய ராவணனை
செகுத்தான்-கொன்றதிருமாலும்
துத்தியம்புரியும்-தோத்திரஞ் செய்யும்
சேவல்-குக்குடமான
அங்கை-அழகியகையிலேந்திய
கொடியானே-துவசமுடைய வனே
வளமை-செழிப்புற்ற
சிரவை-சிரவணபுரத்துக்கு
அரசே-தலைவனுனகுமரகுரு பரக்கடவுளே
வல்—சீக்கிரமாக
அங்கு—அவ்விடத்திலுள்ள
ஐ-பஞ்சேந்திரியங்கட்கு
ஒடியா-முறிவுபடாத
இன்ப—பேரின்பமயமான
ஞானநிட்சேபம்-அறிவிப்பு தையலை
நல்கு-கொடுத்தருள்
ஏ-அசை 90

**சேபத் தியக்கவி ஞர்பா வலர்துதி செப்புமிசைச்**
**சேபத் தியக்கவி சேடம் பொலியெஞ் சிரவையர**
**சேபத் தியக்கவி யன்ஞான மீந்திச் செகம்பெறுநிம்**
**சேபத் தியக்கவி யாய்கவி நேய செவிக்களனே**

சே-செவ்விதான
பத்திய-பிரபந்தங்கள்பாடும்
கவிஞர்-அழகமைந்த
பாவலர்-புலவர்கள்
துதி-தோத்திரங்கள்
செப்பும்-சொல்லத்தக்க
இசை—கீர்த்திமிகுந்த
சேமத்து-இலிங்கத்திணது
இயக்க-பிரகாசமுற்ற
விசேடம்-சிறப்புத்தன்மை
பொலி-மிகுந்த
எம்-எம்முடைய
சிரவை-சிரவணபுரத்துள்ள
அரசே—தலைவனே
பத்தி-அன்பான
அக்க—கண்ணமைந்த
வியன்-விரிந்த
ஞான-மெய்யுணர்வை
ஈந்து-கொடுத்து
இ-இந்த
செகம்பெறும்-பூமியிலடையும்
நிட்சேபம்-பொருட்புதைய
லாலுண்டாகும்
தியக்கு-மயக்கத்தை
அவியாய்—இல்லையாகச்
செய்வாய்
கவி-தோத்திரப்பாடல்களின்
நேய-அன்புமிகுந்த
செவி-காதுகளாகிய
களனே—இடத்தையுடையனே

91

**செவிவாய்ப் பணித் தமை யத்தரு மிம்மந் திரமெனநீ**
**செவிவாய்ப் பணித்தமை நம்பிநின் றேனமெய் சிரவையகட்**
**செவிவாய்ப் பணித்தகை யிற்கவ் வியநற் சிகிமிசையிச்**
**செவிவாய்ப் பணித்தவின் பீந்தருள் செய்சீக் கிரத்துவந்தே**

செவி—செபிக்குதி
வாய்ப்பு-சிறப்பை
அணித்து-சமீபத்தில்
அமைய—இசையும்படியாக
தரும்-கொடுக்கும்
இம்மந்திரம்-இந்தமந்திரம்
என—என்பதாக
நீ-நீ
செவிவாய்—எனதுகாதின்கண்
பணித்தமை-கட்டளையிட்டதை
நம்பி-சத்தியமாகக்கருதி
நின்றேன்-நிலைத்துள்ளேன்
மெய்—உண்மையாகும்
சிரவைய-சிரவணபுத்திறை
வனே
கட்செவி-பாம்பை
வாய்-வாயினிடத்து
பணித்தகையில்-ஆபரணத்
தைப்போல
கவ்விய—பிடித்துள்ள
நல்-நன்மையான
சிகிமிசை—மயில்வாகனத்தின் மீது
இ-இந்த
செவி-சமயத்தில்
வாய்ப்பு-சித்திப்பு
அணித்த—மதுரம்பெருகும்
இன்பு-பேரின்பமுற
ஈந்தருள்செய்-கொடுத்தருள்புரி
சீக்கிரத்து-விரைந்து
வந்து-எழுந்தருளி
ஏ-அசை

92

சீக்கிர மாகவந் தண்பூபெய் கைதுத் தியம்வசைநார்
சீக்கிர மாகவந் தந்நீ டப்பூசைத் தைதேயர்க்கொள்வாய்
சீக்கிர மாகவந் தந்திகழ் வாய்மைச் சிரவையினிற்
சீக்கிர மாகவந் தம்பொலி வான்கதி தேர்தரவே

சீக்கிரம்-அம்புகளை
ஆகவம்-வில்லை(முறையே)
தண்பூ-குளிர்ந்தமலராகவும்
பெய்கை-பொழியுங்கையாகவும்
துத்தியம்—தோத்திரமாவது
வசை-நிந்தனையாகவும்
நார்—அன்பானது
சீக்கிரமா-குரூரமாகவும்
கவந்தம்—உடற்குறைகளாகுதல்
நடம்-நடனமாகவும்செய்யும்
பூசை—பூசனையையுடைய
தைதேயா-அசுரர்களை
கொள்வாய்-அடிமையாக்குவர்
கருணையையுடையாய்
சீக்கிரமாக—விரைவாக
வந்து-எழுந்தருளி
அம்-அழகு
திகழ்-பிரகாசிக்கும்
சிரவையினில்-சிரவணபுரத்தில்
சீ-பிரகாசமயமான
கிரமா-ஒழுங்குடையோனே
கவ்-பிடித்துக்கொள்
அந்தம்பொலி-முடிவுவிளக்க
முற்ற
வான்கதி-முத்தியை
தேர்தர—தெளிந்துகொள்ள
ஏ—அசை

93

தேரத்தி யானசம் பத் தகையின்பத் திரளசைபேய்த்
தேரத்தி யானசம் பத்தேகொ லின்பிற் சிரவையன்மெய்
தேரத்தி யானசம் பந்தம தேநித் தியானந்தமாத்
தேரத்தி யானசம் பத்தினி யாக்கையிச் சித்தநெஞ்சே

தேர்—தேரும்
சுத்தி-யானையும்
யான-விமானமும்ஆகிய
சம்பத்தகை-மேட்டிமைக்
குணம்உண்டாக்கும்
இன்பத்திரள்—சுகபோகங்கள்
அசை-இயங்குகின்ற
பேய்த்தேர்—கான்றசலம்போன்
றதல்லாமல்
அத்தி—உண்மை
ஆன—ஆகத்தக்க
சம்பத்தேகொல்-செல்வமாமோ
அன்பில்-பேரன்புகொண்டு
சிரவையன்—சிரவணபுரத்தலை
வனுனகுமரகுருபரக்
கடவுளது
மெய்-சத்தியத்தன்மையை
தேர்-ஆராய்ந்தமையும்
அ-அந்த
தியான-சிந்தனைசெய்தலான
சம்பந்தம்-கலப்பே
நித்தியானந்தமா-அழிவில்லாத
பேரின்பமென்பதாக
தேர்—தெளியக்கடவாய்
அத்தி—எலும்பாதியகொண்டு
ஆன-கெடக்கூடிய
சம்பு-நரிமுதலிய
அ-அந்தவிலங்குபட்சிகளுக்கு
தீனி-தின்பண்டமான
யாக்கை-சரீரத்தை
இச்சித்த—பயனின்றிவிரும்பிய
நெஞ்சே—மனமே

94

சித்திரப் பாட்டு வழியுற வைக்கனற் சேர்த்துடன்பு
சித்திரப் பாட்டு முடிவின் மறந்தவர் செல்கதிநச்
சித்திரப் பாட்டு முயல்கின்றி லீர்நற்சிரவையினஞ்
சித்திரப் பாட்டுவ கைக்குரு வின்புகழ் தேடுமினே

சித்ரா-பொய்யாகிய
பாட்டு-வருத்தமுற்றுழலும்
வழி-வமிசத்துதித்த
உறவை-சுற்றத்தாரை
கனல்-அக்கினிக்கிரையாக
சேர்த்து-கூட்டிவிட்டு
உடன்-உடனே
புசித்திர்-உண்ணுகின்றீர்
அப்பு-சலத்தினது
ஆட்டு-மூழ்கியதன்
முடிவில்-கடைசியில்
மறந்து-மறந்துவிட்டு
அவர்-இறந்தவர்கள்
செல்கதி-சென்றநரகவுலகை
நச்சி-விரும்பினவராகி
திர-உறுதிதரக்கூடிய
பாட்டு-வேலையானதவத்
துறையில்
முயல்கின்றிலீர்-முயற்சியா
தவர்களே
நல்-நல்ல
சிரவையில்-சிரவணபுரத்தில்
நம்-நமது
சித்திரப்பாட்டு-சித்திரக்கவிகள்
உவகை-சந்தோடத்தமிழ்ந்த
குருவின்-குமரகுருபரக்கடவுளது
புகழ்-பொருள்சேர்புகழ்களையே
தேடுமின்-அராய்ந்துய்வீராக
ஏ-அசை

95

தேட்டத் தமைந்த விதிவழி யேவந்து சேர்ந்துளவாந்
தேட்டத் தமைந்த ரிடமாக்கு மாசைச் செறிவதெனுந்
தேட்டத் தமைந்த கலும்படி யின்பச் சிரவையின்புத்
தேட்டத் தமைந்த விருந்தவப் பேறு சித்தித்தனமே

தேட்டத்து-சம்பாத்தியத்தில்
அமைந்த-பொருந்திய
விதிவழி-ஊழின்மூலமாக
வந்து-அடைந்து
சேர்ந்துளவாம்-கைகூடியவான
தேட்டு-மேலான
அத்தம்-திரவியத்தை
மைந்தரிடம்-புதல்வர்கள்பால்
ஆக்கும்-சேரவைக்கும்
ஆசை-இச்சையான
செறிவது-நெருக்கம்
எனும்-என்கின்ற
தேள்-தேளாலாகிய
தத்தம்-ஆபத்துடையேமானயாம்
ஐந்து-பஞ்சேந்திரியச்சேட்டி
அகலும்படி-நீங்கும்வண்ணம்
இன்ப-பேரின்பமயமான
சிரவையின்-சிரவணபுரத்தின்
புத்தேள்-தெய்வமாகியகுமர
குருபரக்கடவுளுக்கு
தந்த-சுவிகாரமான
மைந்து-வலிமை
அவிரும்-பிரகாசிக்கும்
தவப்பேறு-மாதவம்பெறுதலை
சித்தித்தனம்-அடைந்தனம்
ஏ-அசை

96

**தித்தவி சித்திர மிக்கும் படிபுரி தீவினைக்**
**தித்தவி சித்திர ணம்பட் டயர்ந்தேன் சிரவைகொளா**
**தித்தவி சித்திர மார்காட்சி யீந்தென் செவிவழிபோ**
**தித்தவி சித்திர மெந்நாளு மீண்டுசந் திப்பறவே**

தித்த-கசப்புற்றவைகள்மீதும்
இசித்து-இழுத்து
இரமிக்கும்படி-இன்பமுறும்படி
புரி-செய்கின்ற
தீவினை-கொடியவினைகள்
கதித்த-அதிகப்பட்டதனால்
விசித்து—கட்டுப்பட்டு
இரணம்பட்டு—பண்பாடுற்று
அயர்ந்தேன்-அவசமுற்றேன்
சிரவைகொள்-சிரவணபுரத்தை யிடமாகக்கொண்ட
ஆதித்த-ஞானசூரியனாகியகுமர குருபரக்கடவுளே
விசித்திரம்-அதிசயமானது
ஆர்-நிறைவுபெற்ற
காட்சி- உனதுதிருக்காட்சியை
ஈந்து-கொடுத்தருளி
என்-அடியேனுடைய
செவிவழி-காதுகளின்மூலமாக
போதித்து-உபதேசம்புரிந்து
அவி—கொன்றருள்
சித்திரம்—பொய்மைகளை
எந்நாளும்—எக்காலத்தும்
ஈண்டு-நெருங்கியுள்ள
சந்திப்பு-தொடர்பு
அற—நீங்கியொழியும்படி

97

**திப்பியங் காட்டு ளடங்கி நொந்தேன்முன் சிரவையிலெய்**
**திப்பியங் காட்டு மிசையூர்ந் தடக்கலிற் றீயவென்வந்**
**திப்பியங் காட்டு மறக்கொடி சொல்லிற் செவிகொடருள்**
**திப்பியங் காட்டு விடேலுன் னடைக்கலந் தீர்கிலமே**

திப்பி-கோதுபோன்ற
அங்க—சரீரத்தினது
ஆட்டுள்-அசைவினுள்ளாக
அடங்கி-பதிந்து
நொந்தேன்-வருத்தமுற்றேனது
முன்-கண்களின்முன்பாக
சிரவையில்—சிரவணபுரத்தில்
எய்தி-அடைந்து
பிய்-பிட்டு
அங்கு-நாரதர்யாகத்திலுதித்த
ஆட்டுமிசை-ஆட்டின்மீது
ஊர்ந்து-ஏறி
அடக்கலில்-அடக்கியாண்டதைப்போல
தீய-கொடிய
என்-அடியேனுடைய
வந்திப்பு-வணங்கித்துதிக்கும்
இயம்-சொற்களை
காட்டு-தினைப்புனத்தமர்ந்த
மறக்கொடி—வள்ளிநாயகியினது
சொல்லில்-வார்த்தைபோல
செவி-காதுகளில்
கொடு-கொண்டு
அருள்-திருவண்மயமான
திப்பியம்—விளக்கமுற்றதரிசனத்தை
காட்டு-தெரியச்செய்
விடேல்-விட்டுவிடாதே
உன்—உனது
அடைக்கலம்-உடைமையாகக் தன்மையை
தீர்கிலம்-நீங்குகிலோம்
ஏ—அசை

98

தீரத் தவிருந் திருக்கூட்ட நாடொறுஞ் சேர்ந்தபொன்னித்
தீரத் தவிருந் திருவே ரகத்த சிரவைகொளா
தீரத் தவிருந் தினமா யடைந்தனஞ் சென்மவினை
தீரத் தவிருந் தினமா யினுங்கொளச் செப்பதியே

தீரத்து-வைராக்கியத்துடன்
அவிரும்—பிரகாசிக்கும்
திரு-தெய்வீகத்தன்மையுற்ற
கூட்டம்-அடியார்சங்கம்
நாடொறும்—தினந்தோறும்
சேர்ந்த-அடைந்துள்ள
பொன்னி—காவேரிநதியினது
தீரத்து-கரையிலுள்ள
இரும்-பெரிதாகிய
திருவேரகத்த—சுவாமிமலையை யுடைய
சிரவை—சிரவணபுரத்தை
கொள்-இடமாகக்கொண்ட
ஆதி-முதல்வனே

ரத்த-இரத்தசம்பந்தமான பிறப்புரிமைபெற்ற
விருந்து—அதிதியாகிய
இனமாய்-குலமுடையவராகி
அடைந்தனம்-சரணுகதியுற்ருேம்
சென்ம-பிறப்புக்கேதுவான
வினை—கன்மங்கள்
தீர—முழுவதும்
தவிரும்—நீக்கமடையும்
தினமாயினும்-நாளையாளுலும்
கொள-எமதுசெவிவினவும்படி
செப்புதி-சொல்லியருள்வாயாக
ஏ-அசை

99

செப்பத் தமய மிசையடி யேன்கொண்டு சீர்த்திலங்கச்
செப்பத் தமய மிசைமுப் புரத்தைச் சிரித்தெரித்த
செப்பத் தமய மிசைமேனியற்குச் சிரவணநீ
செப்பத் தமய மிசைதார கத்துட் சிரவணமே

செப்பத்து-நடுநிலையில்
அமை-பதிதலாகிய
அமிசை-அமிசத்தை
அடியேன்-நாயேன்
கொண்டு-கைக்கொண்டு
சீர்த்து-சிறப்புற்று
இலங்க—பிரகாசிக்கும்படி
செப்பு-தாமிரம்
அத்தம்-பொன்
அயம்-இரும்புஆகியவடிவை
இசை-பெற்றுள்ள
முப்புரத்தை-திரிபுரங்களை
சிரித்து-நகைத்து
எரித்த—சாம்பராக்கிய
செப்பு-சிவந்த

அத்தமயம்-அந்திவானத்தை
இசை-ஒப்பாகும்
மேனியற்கு-திருமேனியையுடையபரமசிவனுக்கு
சிரவண-சிரவணபுரத்தமர்ந்த குமரகுருபரனுகிய
நீ-நீ
செப்பு-திருவாய்மலர்ந்தருளிய
அத்தமயம்-செம்பொருள்மயத்தை
இசை—கூட்டவல்ல
தாரத்து-பிரணவத்தினது
உள்-உள்ளேயமைந்த
சிரவணம்—கேள்வியைஅருள வேண்டும்
ஏ-அசை

100

## நூற்பயன்

சிரவையந் தாதி தனங்கையிற் றேய்விதித் திட்டமைய
சிரவையந் தாதி யலுடன்முன் றன்கையுந் தீர்த்துளின்பச்
சிரவையந் தாதி கழப்புரி வானுரஞ் சேர்தொடையாஞ்
சிரவையந் தாதி நனியுணர் வாருட் சிறப்பிடுமே

சிர-தலையின்கண்ணே
வை—வைக்குதியென்று
அந்த—முடிவமையச்செய்யும்
ஆதிதன்-பிரமதேவனது
விதி-ஊழாகிய
தீட்டு-எழுத்தானது
அமை—பதிக்கின்ற
அசிர-அற்பகாலவளவுள்ள
வையம்-புவனபோகமும்
தாது-சத்ததாதுக்கள்
இயல்-பொருந்தியதான
உடல்—சரீரம்கரணமும்
முன்-ஆதியவான
நான்கையும்-நால்வகையையும்
தீர்த்து—போகச்செய்து
உள்-இதயத்தில்
இன்ப—பேரின்பத்தின்
சிரவை-பெருக்கத்தை

அந்தா-பொருந்தி
திகழ—பிரகாசிக்கும்படி
புரிவான்-செய்யவல்லகுமர
குருபரக்கடவுளது
உரம்—மார்பினிடத்தில்
சேர்—இசைந்துள்ள
தொடையாம்—மாலையாகிய
சிரவையந்தாதி-சிரவணபுர
முன்னிலைச்சுட்டமைந்த
அந்தாதிப்பிரபந்தமானது
நனி—மிகுதியாக
உணர்வாருள்—ஆராய்பவர்
களது
உள்-உள்ளத்தின்கண்
சிறப்பு-பிறவிப்பயனை
இடும்-கொடுக்கும்
ஏ—அசை

தெய்வமே துணை

தனனதன தான தந்தானத்—தனதான
கருணைமுத லாய பண்போரெட்
டுணையுமில ராய்ம லந்தோய்பொய்க்
கடமதனை நானெ னுங்கோதுற்—றிகழாதே
கணிதமில வான பொன்றேடித்
தமையனையர் யாவரென்றேதிக்
கருவமலி வாரு டன்கூடிக்—தவியாதே
அருணைபொலி கோபு ரந்தோய்மெய்ச்
சுகசொருப மான வன்போதத்
தமைதருமு னுது செம்பாதத்—துணைதானே
பரைநிமிட நேர முஞ்சோர்வற்
றிரவுபக னுடி யன்பான்மிக்
கழுதுருகு மேன்மை குன்றுநற்—றவமீவாய்
தருணமிதி லானெ னுந்தேவர்க்
கருள்புரிய மார ரன்பாலத்
தழல்விழியி லேவ ருந்தேசுப்—பொரியாவாய்
சமரமிடு தார கன்பாவக்
கிரியொடழி வாக மொய்ம்பார்கைத்
தலமருவு வேல்வி டுந்தீரக்—குமரேசா
கருணகயொ ராயி ரந்தோய்வத்
திரமெய்தரி மாமு கன்றூலத்
தொடர்பொழிய விசி டுஞ்சீர்வச்—சிரவவேளே
தொலைவிலுயர் சூரன் வன்றேகப்
பிளவையிவர் தோகை கவண்சேவற்
றுவசமென வேகொள் சிங்காரப்—பெருமானே

தனதனத் தாத்த தானத்—தனதான
இனன்முதற் சாற்று கோளுநட்
பகைமைநந் பாட்சி யாயுற்

எரியிடத் தேற்ற கீடத்
தகையெனப் போக்கி லாதுற்
றிடையெனைப் போக்கி டாமற்—றயவோடே
கனமிசைத்தோற்றும்வேள்விக்
கிறைசுதற் காக்கும் வாய்மைக்
கனவளித் தேக்க மோர்சற்—றணுகாதே
கனவரைக் கூட்ட மிதிற்
பரிநடத் தாட்கள் சூடிக்
கதியருட் சீர்த்தி ஞானத்—திறலீவாய்
சினமிகுத் தார்க்கும் வேள்வித்
தகர்பிடித் தூக்க மோகுய்த்
திகும்விறற் றீர்க்க னேசத்—தியவாழ்வே
தெளிதமிழ்ப் பாக்க ளோதித்
தொழுதுமிக் கேத்து வார்பிற்
றிரியருட் கீர்த்தி யோகைக்—குமரேசா
தினகரக் கோட்ட முகுற்
றெனதகக் கோட்ட மேவித்
திகழ்துணைத் தாட்சரோசக்—குருநாதா
சிரவணத் தூர்க்கெள மாரத்
திருமடப் பாற்கொள் கோயிற்
சிவமணக் கார்த்தி கேயப்—பெருமானே



நல்வாழ்த்துக்களுடன்

## குமரகுருபரர் டெக்ஸ்டைல்ஸ்

RVS நகர் கரூர் ரோடு
N. பாரைப்பட்டி அஞ்சல்
திண்டுக்கல்-4

## தீபம்

7, லட்சுமிபுரம்
பீளமேடு கோயமுத்தூர்–4
தொலைபேசி 87253

---

தீபம் கோவை-4